# குறைந்த காலம்.
# நிறைந்த லாபம்.

**RPS பெனிஃபிட் ஃபண்ட் வழங்கும்
குறைந்த கால டெபாசிட் திட்டம்,
அதிக வட்டியுடன்!**

| | | |
|---|---|---|
| 45 | நாட்கள் | 15% p.a. |
| 3 | மாதங்கள் | 16% p.a. |
| 6 | மாதங்கள் | 17% p.a. |

ஒரே சமயத்தில் நிறைந்த லாபமும்
மனநிறைவும் அடையக்கூடிய இந்த அரிய
வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.



## RPS BENEFIT FUND LTD
(Declared as "NIDHI" by the Central Government)

தலைமை அலுவலகம்: 16, இராமநாதன் தெரு,
தி. நகர், சென்னை - 17. போன்: 4341554, 4341346.

கிளைகள்: இராயபுரம், சென்னை, போன்: 5956164.
கோயம்புத்தூர், போன்: 443576. வேலூர், போன்: 21902.
மதுரை, போன்: 33752. காஞ்சிபுரம், போன்: 23408.
பாண்டிச்சேரி, போன்: 31859. மல்லேஸ்வரம், பெங்களூர்,
போன்: 366433. இந்திரா நகர், பெங்களூர், போன்: 5569397.
செகந்திராபாத், போன்: 819488.

சென்னையில் மந்தைவெளி, அண்ணாநகரிலும் மற்றும் விஜயவாடாவிலும்
எங்கள் புதிய கிளைகளை விரைவில் திறக்க இருக்கிறோம்.

(உறுப்பினர்களுக்கு மட்டும்)

AKSHAR




# சந்திராசாமி: மோசடிகளில் சாதனை சாமி!

இன்று அரசியலில் பரபரப்பாகப் பேசப்படும் சாமிகள் இருவர். 1. சுப்ரமணியசாமி 2. சந்திராசாமி.

பல குற்றச்சாட்டுகளில் சிக்கி, ஆபத்தில் திணறுகிறார் ச. சாமி. சு. சுவாமியோ, ச. சாமி நிரபராதி என்று அடித்துச் சொல்கிறார்! ஆனால் ச. சாமி தொடர்பான பழைய வழக்குகள் மற்றும் புதிய குற்றச்சாட்டுகளைப் பார்த்தால் நேர்மைக்கும் அவருக்கும் உள்ள

தூரம் கற்பனை செய்ய முடியாததாகவே தோன்றுகிறது. இதோ ஒரு பட்டியல் :

1. தமது 23-வது வயதில் – 'சாமியார்' ஆவதற்கு முன்பே (அப்போது பெயர் – நேமி சந்த் ஜெயின்) போலி தஸ்தாவேஜுகள் மூலம் நாகார்ஜுன சாகர் இரும்பாலைக் கழிவுகளை ஜெய்ப்பூர் வியாபாரி ஒருவருக்கு ரகசியமாக விற்க உதவியதை ஆந்திர போலீஸ் கண்டு பிடித்தது. இரண்டு தடவை ஜெயில் வாசம்.

2. 'சிகாகோவில், தமது அந்நியச் செலாவணி தகிடுதத்த நடவடிக்கைகளால் இந்தியர்களுக்கே கெட்ட பெயர் வரும்படி செய்து விட்டார்' என ராஜபோடி என்ற சிகாகோ வாழ் இந்தியர், ராஜேஷ் பைலட்டிடம் புகார் தந்திருக்கிறார்.

3. படேல் என்ற மற்றொரு என்.ஆர்.ஐ. இதே அந்நியச் செலாவணி விஷயத்தில், தாம் சாமியால் ஏமாற்றப்பட்டதாக சி.பி.ஐ.யில் புகார் தந்துள்ளனர்.

4. அனுகூல் சந்திரப்பிரதான் என்ற மனித உரிமைக் கழகத்தைச் சேர்ந்தவரும் சாமி மேல் அந்நியச் செலாவணி மோசடிக் குற்றம் சாட்டியிருக்கிறார்.

5. வெளிநாட்டு வங்கி அதிகாரிகள் சாமிக்குக் கோடிக்கணக்கில் பணம் தந்திருப்பதாகச் சொல்பவர் லக்குபாய் படேல்.

6. தாய்லாந்து உயர்நீதி மன்றத்தில் சாமி மேல் ஒரு வழக்கு பதிவாகி இருக்கிறது. அதுவும் துட்டு சமாசாரம்தான்.

7. கணக்கில் வராத பணமாக தாவூத் இப்ராகிமிடமிருந்து பன்னிரண்டு கோடி ரூபாய் பெற்றிருப்பதாகக் குற்றச்சாட்டு.

8. சுரேந்திரகுமார் ஜெயின் என்பவரிடமிருந்து பத்து கோடி வாங்கி, எட்டு கோடியைப் பிரதமர் நரசிம்மராவுக்குக் கொடுத்ததாக வழக்கு.

9. செயின்ட் கிட்ஸ் மோசடி வழக்கு. (சி.பி.ஐ. தொடுத்தது)

10. வழக்கறிஞர் ஜெத்மலானியின் மகள் பெயரில் வங்கியில் 50,000 டாலர் ச. சாமி செலுத்தியதற்கான காரணம் என்ன என்று கேட்டு ஒரு வழக்கு.

11. சந்திராசாமியின் விஸ்வதரம் சாஸ்தான் ஆசிரமத்தின் மின்கட்டணம் ரூ. 11 லட்சம் பாக்கி என்று மின்சார வாரியம் கூறியிருக்கிறது. (தற்சமயம் 'பவர்கட்')

12. மாநகராட்சி உத்தரவின்றி 100 சதுர அடி ஆசிரம விஸ்தரிப்பு செய்திருக்கிறார். இடித்துத் தள்ள உத்தரவாகியுள்ளது!

13. தலைமைத் தேர்தல் ஆணையர் சேஷனுக்கு ஏழு லட்சம் மதிப்புள்ள வைர மோதிரம் 'அன்பளிப்பா'கத் தந்திருப்பதாகக் குற்றச்சாட்டு.

14. முந்நாள் பிரதமர் ராஜீவ்காந்தியை 'பிளாக்மெயில்' செய்ய முயன்றது.

15. இரண்டு சாமியார்களைக் கடத்த முயற்சி.

16. பத்திரிகையாளர் ராஜேந்தர் சிங் காரில் வெடிகுண்டு வைக்கச் சதி செய்தார்.

17. திவாரியைத் தம் ஆட்களைக் கொண்டு மிரட்டியது.

18. காலிஸ்தான் தீவிரவாதி ஜகத்சிங் என்பவருக்கு 'நிதி உதவி' செய்தது.

19. கடத்தல் மன்னன் கஷோக்கியுடன் நெருங்கிய உறவு.

20. 'அரசியல் அழகி' பமீலாவை கஷோக்கிக்கு அறிமுகம் செய்து ஆதாயம் அடைந்தது. (பி.சி.பி. சர்வதேச வங்கியில் பணபேர வாய்ப்பு)

21. பம்பாய் வெடி விபத்து சதிகாரனுக்கு 6 மாதம் அடைக்கலம் தந்தது – முக்கிய குற்றவாளி தாவூத் இப்ராகிம் தப்ப உதவியது.

22. இஸ்ரேலைச் சேர்ந்த கூலிப் படைத் தலைவன் 'மொசாத்'துடன் பேரம் பேசி, ராஜீவைக் கொலை செய்ய முயன்றதாக ஆரிப் முகமதுகான் சொல்லும் குற்றச்சாட்டு.

23. பம்பாய் வெடி விபத்துச் சதிகாரர்களில் ஒருவனான பப்லு ஸ்ரீவத்ஸவாவுடன் தொடர்பு கொண்டிருந்தார் என்று ஒரு குற்றச்சாட்டு. (இதை சாமி மறுக்கவில்லை. ஆனால் பப்லுவை அறிமுகப்படுத்தியதே ஆரிப் முகமதுகான்தான் என்கிறார்!)

தொகுப்பு : **ஆர்.பி.சாரதி**

---



**"என்ன திமிர் இருந்தா இந்தியாவில் தங்கச் சுரங்கம் எங்கெங்கு இருக்கிறதுங்கிற கேள்விக்கு 'கோலார் மற்றும் போயஸ்கார்டனில்'னு பதில் எழுதுவே?"**

**– உ. ராஜாஜி**



# ஒரு 'உம்மா'வின் கதை

படத்தில் கறுப்பு உடையணிந்த நபர் ஒருவர், வெள்ளை உடையணிந்த பெண் ஒருத்தியை, அள்ளி அணைத்து முத்தம் கொடுப்பதைப் பாருங்கள். ஆனால் இவர்கள் கணவன் - மனைவியோ, காதலர்களோ இல்லை. சொல்லப் போனால், சற்றும் முன்பின் அறிமுகமில்லாதவர்கள்.

இந்த போட்டோவிற்குப் பின்னால், உள்ள சுவாரசியமான கதையை விவரிக்கிறது 'லைஃப்' பத்திரிகை.

நியூயார்க் நகரில், டைம்ஸ் சதுக்கத்தில், 1945 ஆகஸ்ட் பதினான்காம் நாள் இந்த போட்டோ எடுக்கப்பட்டது.

இரண்டாம் உலகப் போரில், ஜப்பான் சரணடைந்த தருணம் அது! மொத்த அமெரிக்காவும் மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தது. அந்த நேரத்தில்தான் கறுப்பு உடையணிந்த அமெரிக்க கடற்படை வீரர் ஒருவர், எதிரே வந்த ஒரு பெண்மணி யைக் கட்டிப் பிடித்து முத்தமிட்டார்!

லைஃப் பத்திரிகையின் புகைப்பட நிபுணர் ஆல்பிரட் எய்சென்ஸ் டெட் (இப்போது வயது 96) அந்தக் காட்சியைப் புகைப்படமெடுத்துவிட அது, லைஃப் பத்திரிகையில் வெளியாகி, பரபரப்பூட்டியது!

சமீபத்தில் - அதாவது சுமார் 50 ஆண்டுகளுக்குப் பிறகு, அந்தப் புகைப்படம் மீண்டும் பரபரப்பு ஏற்படுத்தியுள்ளது. 'அந்தப் போட்டோவில் முத்த மிட்டுக் கொண்டவர்கள் யார்; அவர்கள் இப்போது எங்கே, எப்படி இருக்கிறார்கள்' என்று ஆராய்ந்து கண்டு பிடிக்க முயன்றது 'லைஃப்' இதழ்.

போட்டோ பெண்மணி இப்போது கலிபோர்னியாவில் வசிக்கும் எழுபத்தி ஏழு வயது 'எடித் ஷைன்' என்பது சுலபமாகவே தெரிந்து விட்டது!

ஆனால், அவருக்குத் தம்மை முத்தமிட்டவரின் முகம் நினைவில்லை என்பதால் அந்த ஆண் யார் என்பதைக் கண்டு பிடிக்க மிகவும் சிரமப்பட்டது 'லைஃப்'. விவரம் தெரிந்ததும், பலரும் அந்தக் கறுப்பு உடை நபர், தான்தான் என்று கூறிக் கொண்டு, லைஃப் பத்திரிகையோடு தொடர்பு கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்!

ஷைன், அவர்கள் ஒவ்வொருவரையும், பரபரப்பான அந்த முத்தத்தை விவரிக்கச் சொன்னார்!

"முத்தமிட்ட பிறகு என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டார்.

ஒவ்வொருவரின் முத்த விவரிப்பும் ஒவ்வொரு மாதிரி இருந்தது. முத்தமிட்ட பிறகு, 'உங்களுடைய முகவரியைக் கேட்டேன்; டின்னருக்குப் போகலாமா என்று கேட்டேன்' என்று பலவித பதில்கள் வந்தன.

"நீங்கள் போலி ஆசாமி!" என்று சொல்லி, அனைவரையும் ஷைன் அனுப்பி வைத்து விட்டார்.

இறுதியில், நியூயார்க் போலீஸின் துப்பறியும் அதிகாரியாய் இருந்து ஓய்வு பெற்ற 'கார்ல் மஸ்கரெல்லோ' என்ற 68 வயது ஆசாமி, ஷைனைச் சந்தித்து, தான்தான் அவரை ஐம்பது வருடங்களுக்கு முன் முத்தமிட்ட நபர் என்று சொன்ன போது, ஷைன் வழக்கமான கேள்விகளைக் கேட்டார்.

திடீரென எதிரே வந்த நர்ஸை, யாரென்று தெரியாது என்றாலும், கட்டிப் பிடித்து அழுத்தமாய் முத்தமிட்டேன். சில நிமிடங்கள் அது நீடித்தது. அதன் பின் நானும் சரி, அவரும் சரி, ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. நான் பாட்டுக்கு நடந்து, அந்த இடத்தை விட்டு அகன்றேன்" என்றார் கார்ல்.

"எஸ்! நீங்கள்தான் அன்று என்னை முத்தமிட்டவர் என்பதில் துளியும் சந்தேகம் இடையாது" என்றார் ஷைன்!

எதிரே வந்த பெண்ணை, கார்ல் ஏன் திடீரென்று முத்தமிட்டார்?

கார்ல் கூறும் பதில் :

"அப்போது எனக்கு வயது பத்தொன்பது. அமெரிக்கக் கடற்படையின் நீர் மூழ்கிக் கப்பல் ஒன்றில் எனக்கு வேலை. இரண்டாம் உலகப் போரில், ஜப்பானியப் படைகள் சரணடைந்த செய்தி கேட்டு, மக்கள் எல்லாருக்குமே மகிழ்ச்சிதானவில்லை. யாரோ ஒருவர், என்னிடம் மூன்று பீர் பாட்டில்களைத் தர, அவற்றை ஒரே மூச்சில் நான் குடித்து முடித்தேன். உற்சாகம் ஊற்றாகப் பீறிட்டது. எதிரில் கண்ட பெண்களையெல்லாம் முத்தமிட்டுக் கொண்டே போனேன். அவர்களுள் ஒருத்தி வெள்ளை உடையணிந்த நர்ஸ்.... அதாவது, இந்த ஷைன்!"

தகவல் : **எஸ். சந்திரமௌலி**

# 16 கி. ராஜேந்திரன்

குருஜியும் பென்ஜமினும் வேறு வேறல்ல என்பதாகத் தெரிய வந்த பிறகு குழப்பங்கள், சந்தேகங்கள் தீர்ந்து, நடந்தது எல்லாமே ஒன்றோடொன்று பொருந்தி வருவதை இன்பா உணர்ந்தாள். அகில பாரத ஹிந்து பரிவார் கட்டடத்தில் குண்டு வெடித்ததில் லட்சிய நோக்கு ஒன்றுமில்லை. ஒரு திசை திருப்பும் முயற்சி; அவ்வளவே. குருஜியின் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு சென்னை வந்திருக்கிறான் முனியன். பணத்தாசை காட்டியோ அல்லது மிரட்டியோ குண்டு வைக்க அவனைத் தயாரித்திருக்கிறார். அவன் பயந்திருக்கிறான். இந்த ஆபத்தான காரியத்தில் ஈடுபடும் போது தனக்கு ஏதாவது ஆகிவிட்டால் தான் யார், எங்கிருந்து வந்தவன் என்பதாவது பிறருக்குத் தெரிய வரட்டும் என்ற நோக்கில் இளாவர் சின்னத்தை பச்சை குத்திக் கொண்டிருக்கிறான். சம்பவம் திட்டமிட்டபடி நடந்து முடிந்திருக்கிறதா என்று உறுதிப் படுத்திக் கொள்ள பென்ஜமின் உருவில் முனியனைப் பின்பற்றி வந்திருக்கிறார் சூரியா சுவாமி. முனியனின் ஆயுசு முடிந்து போய் விட்டதைத் தெரிந்து கொண்டிருக்கிறார். ஸெக்யூரிட்டியிடம் தப்பி, ரஸியா வீட்டு மாடியில் அவளை மிரட்டி விட்டு, மீண்டும் சூரியா சுவாமியாக உருமாறி, ஊட்டி திரும்பி முனியனின் அப்பாவிடம் அவன் பர்மார்ஹூ சென்றிருப்பதாகவும் திரும்பிவர ஆறேழு மாதங்கள் ஆகும் என்றும் சொல்லியிருக்கிறார்.

"அதை அப்படியே அப்பாவிக் கிழவன் என்னிடம் ஒப்பிக்க, நானும் நம்பி ஏமாந்துட்டேன் ஸார்! குருஜியோட ஆசிரமம், போதை மருந்துங்களைக் கள்ளத்தனமாக தயாரிக்கவும் அயல் நாடுகளுக்கு கடத்திப் போகவும் அந்தாளு போட்டுக் கொண்ட திரை. அந்தத் திரைக்கு முன்னால் ஆன்மிக நாடகம் அரங்கேற்றியிருக்காரு."

இன்பா மேலதிகாரி மயில்வாகனத்திடம் விளக்க, "ஆசிரமத்துல ரெய்ட் நடத்துவமா?" என்றார்.

"அவசரப்பட வேண்டாம்" என்று பாரிஸிருந்து வந்த ஃபாக்ஸ் கடிதம் காட்டினாள்.

"இப்ப என்ன செய்யணும்கிற?"

"ஃபாரின் போக பர்மிஷன் வேணும்."

"அடி சக்கை! முதல்ல ஊட்டி; இப்போ ஐரோப்பா டூர், அப்புறம் என்ன அமெரிக்காவா?"

"அவசியம் நேர்ந்தா அங்கேயும் தான் போகணும்."

"தும்பை விட்டு வாலைப் பிடிக்கிறியே? ஆளை இங்கியே மடக்கிப் போடாம நழுவ விட்டுட்டு, இப்ப சிங்கப்பூர் போறேன், கொகோ போறேன்னா? உன் அப்பன் வீட்டுப் பணமா? மக்களோட வரிப்பணம் மிஸ்டர்!"

ஃபாக்ஸ் கடிதத்தை ஒரு விரலால் தட்டிக் காட்டினாள். "கவனிங்க சார்! வலையை இன்னும் பரவலாக விரிக்க வேண்டியிருக்குதுன்னு எழுதியிருக்காங்க. அதனால குருஜியை நாம இங்கே அரெஸ்ட் பண்ணாததே நல்லதாக்க. இந்த சுறா மீனைப் பயன்படுத்தி பெரிய திமிங்கிலத்தைப் பிடிக்க நினைக்கிறாங்க. இதான், எல்லாம் நன்மைக்கேன்றது..."

"குப்புற விழுந்தாலும் மீசைல மண் ஒட்டலேன்றதும் இதுதான்! எதையாவது சொல்லி ஃபாரின் டிரிப்புக்கு வழி தேடிக்க. உன் காட்டுல மழை!"

"வேணாம் ஸார்! நீங்களே போயிட்டு வாங்க. காரியம் நல்லபடியா முடிஞ்சா சரி."

"நீ கேஸை சரியா கையாளணும், கோஸாறு பண்ண வேண்டியது; ரிப்போர் பார்க்க நான் வரணுமா? மேலும் இந்தாளு உன்னைத்தான் கூப்பிட்டிருக்கான். இளம்பு. நான் டில்லிக்கு ஃபோன் போட்டு பர்மிஷன் வாங்கறேன்!"

"குருஜியை அரெஸ்ட் பண்ணிக் கொண்டு வர அனுமதி பெறுமாறு நமது அயல்நாட்டுத் தூதரகங்களையும் முடுக்கி விடணும் ஸார்."

"அதுக்கும் ஏற்பாடு பண்றேன். நீ அங்க போயாவது சுறுசுறுப்பா காரியத்துல இறங்கு. நைட் கிளப், பீப் ஷோன்னு அலைஞ்சு உடம்பைக் கெடுத்துக்காதே!"

"அவசியம் ஏற்பட்டா நைட் கிளப் உள்ளேயும் தான் சார் நுழையணும். எந்த சினிமாவுல வேணும்னாலும் பாருங்க,

# இருட்டு அரண்மனைகள்



மாஃபியா கும்பலைப் பிடிக்கறதுக்கு முன்னாடி ஹீரோ மூணு நைட்கிளப்லயாவது புகுந்து புறப்படுவான்!"

"அது சரி, ஆனா சினிமா ஹீரோ மாதிரி நீ லவ் பண்ணத் தயாராயிருக்கியேயொழிய, வீரத்தைக் காட்ட மாட்டேன்றியே? இதுவரை டிஷ்யும் காட்சி ஒண்ணு கூட இல்லே!"

"இப்பத்தானே ஸார், வில்லன் யாருன்னே தெரிய வந்திருக்கு; இனிமே பாருங்க..."

"புருஸ்லி கணக்கா தூள் கிளப்பிடுவியாக்கும்! உன் பவிசு எனக்குத் தெரியாதா? சரி சரி, இடத்தைக் காலி பண்ணு. பாஸ்போர்ட், விசா எல்லாம் சரி பார்த்துக்க. ஸூட், கோட்டுன்னு ஏகப்பட்டது பில் பண்ணாதே. பழசே போதும்."

"டிரை கிளீனிங் பில்லாவது ஸாங்ஷன் பண்ணுங்க ஸார்" என்று கூறி விட்டுப் பிரிந்தான்.

**வீ**டு திரும்பும்போது, 'அயல் நாட்டுப் பயணத்திட்டம் தீட்டும் தீவிரத்தில் சாயா பற்றிய நினைவே எழவில்லை' என்ற எண்ணம் பிறந்து அவனைக் குற்றவாளியாக்கியது.

வெட்கமும் துயரமும் சேர, "அவளைப் பற்றி இன்னும் ஒரு விவரமும் தெரியாத நிலையில் நான் எப்படி ஃபாரின் போவேன்? எந்த தைரியத்தில்?" என்றான் அப்பாவிடம்.

"கவலைப்படாதேடா" என்று தோளில் தட்டிக் கொடுத்தார் ரங்கநாதன். "கோபம் தணிஞ்சு திரும்பி வந்துடுவா. அப்புறம் கண்ணும் கருத்துமா நான் கவனிச்சுக்கறேன்."

"ஒருவேளை அம்மாவை பிணைக் கைதியா வைச்சிருந்தாங்கன்னா, ஒரு மெஸேஜ் கிடைச்சதும், 'அம்மாவை விட்டுடுங்க; அவங்களுக்குப் பதிலா நான் வந்து சரண்டர் ஆறேன்'னு சொல்வேன்" என்றான் சின்னி.

வளர்ப்பு மகளைக் கட்டி அணைத்துக் கொண்டான். "உனக்கு இன்னொரு முக்கிய வேலை இருக்கு சின்னி."

**ம**றுநாள் ரஸியாவிடம் அழைத்துப் போய் அறிமுகப்படுத்தினான். "படு கட்டி

யான பொண்ணு. ஃபிரியா, கபடமில்லாம பழகுவா. அம்மா மாதிரியே இவளையும் ஆபத்து சூழ்ந்திருக்கு. சூரியா சுவாமி விமானமேறி பறந்துட்டதால அம்மாவுக்கோ இவளுக்கோ அபாயம் நீங்கிட்டதா சொல்ல முடியாது. அவனோட அடியாட்கள் இங்க நிலைமையை கவனிச்சுக்கிட்டேதான் இருப்பாங்க."

"ஏன் ஸார் சின்னியை பயமுறுத்தறீங்க?' என்றாள். "எனக்கு ஒரு ஆபத்துமில்லே சின்னி. டோண்ட் ஒர்ரி!"

"இவளுக்கு நீ பாதுகாப்பா இருக்கணும் சின்னி."

"நிச்சயமா" என்று அப்பாவின் வலக் கரத்தை இரு கைகளாலும் பற்றிக் கொண்டான்.

"ரஸியா! ஒரு சமயம் போதுன்னா நீ வீட்டுக்கு ஃபோன் செய்து இவன்கிட்டே தயங்காம உதவி கேட்கலாம்."

"அதுக்கு அவசியமே நேராது சார்."

"நேராட்டா நல்லாதாச்சு; நேர்ந்தா என்ன செய்யறதுன்னுதானே இப்ப பேச்சு" என்றான் சின்னி. "நான் பார்த்துக்கறேன் அப்பா. நீங்க நிம்மதியா போயிட்டு வாங்க."

"போய்ட்டு வரதா? எங்கே?"

"அப்பா ஃபாரின் டூர் போறார். பிரான்ஸ், ஜெர்மனி, இதாலி, இங்லாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஜப்பான், சைனா..."

"ஏண்டா வீனஸ்ஸையும் மார்ஸையும் விட்டுட்டே?"

"அடுத்த டிரிப்புக்கு ஏதாவது பாக்கி விட்டு வைக்க வேண்டாமா அப்பா!"

குபீர் என்று சிரித்து விட்டாள்.

"என்ன சிரிக்கிறே ரஸியா! ஸ்பேஸ் ஷிப் கூடத் தேவையில்லே! ஸூப்பர்மேன் மாதிரி ஜிங்குன்னு புறப்பட்டு விண்வெளியிலே பறப்பார்!"

"அட! எனக்குத் தெரியாம போச்சே!"

"ஒரு நாள் நீல நிற பெட்ஷீட்டைக் கழுத்தில் கட்டிக்கிட்டு டைனிங் டேபிள்லேர்ந்து சோபாவுக்குப் பாய்ந்தார் பாரு...!"

"அந்த டிவி 'தங்கப் பரிசு' போட்டியில் ரொம்ப கஷ்டமான கேள்வியா கேட்டாங்க."

"அப்படி என்னதான் கேள்விங்க?"

"சற்றுமுன் செய்திகள் வாசித்த பெண்மணிக்கு எத்தனை கண்கள்?"

புளியரை கணேசன்



அவள் மறுபடி வெள்ளிமணி ஓசை எழுப்பினாள். 'நன்றாகப் பழகுவார்கள்' என்று நினைத்தான். ரஸியாவை அவள் பெற்றோர் கவனித்துக் கொள்ள வேண்டும்தான். என்றாலும் கூடுதல் பொறுப்பாக சின்னியையும் ஏற்பாடு செய்ததில் கொஞ்சம் நிம்மதி. வி.ஐ.டி. யும் தொடர்ந்து இருப்பான்.

"ஃபாரின் டூர் எதுக்கு?" என்றாள் ரஸியா.

"பென்ஜமினைப் பிடிச்சு, அவன் கன்னத்துல நாலு அறை வைச்சு, விலங்குமாட்டி, இழுத்து வர!" என்றான் சின்னி உற்சாகமாக.

அவள் கலவரமடைந்து பார்த்தாள்.

"ஆபத்தான காரியம் அங்கிள். ஜாக்கிரதையா இருங்க, ப்ளீஸ்" என்றாள். அவன் தோள்கள் பற்றி எம்பி கன்னத்தில் முத்தம் பதித்தாள்.

"பெஸ்ட் ஆஃப் லக்!"

'அங்கிள்' என்ற சொல் ஒரு மனமாற்றத்தை உணர்த்தி இதயத்தை வருட, புன்னகையுடன் விடை பெற்றான்.

ஒன்பது மணிநேர விமானப் பயணத்தில் ஒரே ஆசனத்தில் சிறைப்பட்டிருக்கும் போது ஏற்படக் கூடிய உடல் சோர்வு நீங்க, 'பறக்கும் போதே தேகப் பயிற்சி' என்று வீடியோ காட்சி தோன்றியது. அதன்படி செய்த தேகப்பயிற்சி இதமாகத்தான் இருந்தது. மனச் சோர்வு நீங்க வீடியோ திரையில் ஐன்ஸ்டைன் ஆஜரானார். 'விஞ்ஞான அறிவை விடவும் காதல் உணர்வே முக்கியமானது, சிறந்தது' என்று தமது மருமகளுக்கு உணர்த்தி, அவளை ஒரு மோட்டார் மெக்கானிக்குடன் இணைத்து வைக்க, நயமான நகைச்சுவை நாடகம் அரங்கேற்றினார். விஞ்ஞானி ஐன்ஸ்டைனை ஒரு சினிமாக் கதையின் பிரதான கதாபாத்திரமாக்கிய ஹாலிவுட் மூளையை வியந்து போற்றினான் இன்பா.

ஃபிராங்ஃபர்ட்டை அடைந்ததும் உடன் விமானம் மாறி, பாரிஸ், சார்ல்ஸ் டிகால் விமான நிலையத்தில் இறங்கினான். அவனை வரவேற்க "இன்பசாகரன்" என்று ஆங்கிலத்தில் பெரிதாக எழுதிய அட்டையை உயர்த்திப் பிடித்துக் கொண்டு நின்ற கறுப்பரை அணுகினான்.

"மிஸ்டர் இன்பா? நான் ஜேம்ஸ்."

"ஜேம்ஸ் பாண்ட்?" என்று கண் சிமிட்டி புன்னகை உதிர்த்தான் இன்பா.

"இல்லே, ஜேம்ஸ் பிளாக்!" என்று கூறி, "இது ஜோக் இல்லை" என்றும் சேர்த்துக் கொண்டதன் மூலம் மனசு சுத்தமான வெள்ளை என்று உணர்த்தினான் கறுப்பன்.

"பாகேஜ்?"

பிரீஃப்கேஸ் தவிர, கையோடு கொண்டு வந்து விட்ட பெட்டியை உயர்த்திக் காட்டி "இவ்வளவுதான்" என்றான்.



''என்னுடைய முதல்படம் ''நூறாவதுநாள், இரண்டாவது படம் ''இருபத்தைந்தாவது வாரம்'', மூன்றாவது படம் ''பொன்விழா''...

''கொஞ்சம் இருங்க. எல்லாமே இப்படி பிரமாதமாக ஓடியிருக்கும் போது இப்ப உங்களுக்குப் படமே இல்லையே, ஏன்?''

''பிரமாதமாக எங்கே ஓடுச்சு? இதெல்லாம் நான் நடிச்சப் படங்களோட பெயருங்க!''

"ஓகே, போகலாம்."

பாஸ்போர்ட், கஸ்டம்ஸ் எல்லாம் பிளாக் உடனிருக்கவே லகுவாகக் கடந்து இண்டர் போல் காரில் ஏற, வழுக்கிச் சென்றது.

"விமானம் இறங்கிய போது பாரிஸின் அழகைப் பார்க்க முடியவில்லை."

"விமானங்கள் நகருக்கு மேலாகப் பறக்கத் தடை இருக்கிறது. ஃபிராங்க் ஃபர்ட் மாதிரி சில நகரங்களில்தான் தவிர்க்க முடியாமல் தரையிறங்குமுன் பறவைக் கண்ணோட்டத்தில் நகரைக் காணலாம். மற்ற நகரங்களில் விமானத் தளத்தை எட்டத்தில் வைத்தும், விமானம் இறங்கும் திசையை கட்டுப்படுத்தியும் நகரவாசிகளை விமானங்களின் சத்தத்திலிருந்து காப்பாற்றுகிறார்கள்."

காது கிழிப்பதையே பண்பாடாகக் கொண்டுள்ள இன்றைய தமிழகத்தை எண்ணி பெருமூச்சு விட்டான்.

"பாரிஸ் சிறிய நகரம்தான். முக்கியமான இடங்களெல்லாம் மையப் பகுதியில் நெருக்கமாகத்தான் இருக்கிறது. பலர் கால்நடையாகவே போய்ப் பார்க்கிறார்கள்."

"சென்ற தடவை வந்த போது ஸீன் நதியில் படகுப் பயணம் செய்தேன். ஆற்றின் இரு கரைகளிலும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கட்டடங்களை விளக்கிக் கொண்டே வந்தார் வழிகாட்டி. மறக்க முடியாத அனுபவம்."

"அதோ, ஐஃபல் டவர்!"

எஃகினால் ஆன உலக மகா அற்புதம் தொலைவில் தெரிந்தது. கியூவில் நின்று, உயரே சென்று பார்த்ததும் நினைவு வந்தது.

"முதல் தடவை வந்தபோது இருந்த பிரமிப்பும் உற்சாகமும் இப்போது இல்லை" என்றான்.

"அடுத்த தடவை வரும்போது காதலியுடன் வந்தால் எல்லாமே புதுசாகத் தெரியும். கிளர்ப்பாக இருக்கும்!"

'சாயாவுடன் வருவேன்' என்று உறுதியாக எண்ணிக் கொண்டான்.

சற்று நேரத்தில் கார் நிற்க, "வந்து விட்டோம்" என்றான் பிளாக்.

"எங்கே?"

"இண்டர்போல் தலைமையகத்துக்கு. சீஃப் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்."

"எவ்வளவு நேரமாகும்?"

"அது உங்கள் சாமர்த்தியம். எவ்வளவு சீக்கிரம் கழன்று கொள்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது. அப்புறம் ஹோட்டலுக்கு அழைத்துப் போகிறேன். களைப்பாகத்தான் இருக்கும்."

அவன் யோசனைப்படி பெட்டியைக் காரிலேயே வைத்து, பூட்டி விட்டு பிரீஃப் கேஸுடன் மட்டும் பின் தொடர்ந்தான்.

மத்திய கிழக்கு மற்றும் இந்தியாவுக்கென தனி பிரிவு இருந்தது. அதன் தலைவர் சொகுசு நாற்காலி விட்டு எழுந்து பிரும்மாண்ட அறைக்கு ஏற்ற மாபெரும் மேஜையைச் சுற்றி வந்து கைகுலுக்கினார். "வெல்கம்" என்றார். "ஜான் கார்மிக் என்பது என் பெயர்."

அறைக்குள் நுழையும் போதே கவனித்தான். சந்தன மரத்தில் கலை நயத்தோடு செதுக்கிய கீதோபதேச சிற்பம். கண்ணாடிப் பெட்டியில் பாதுகாப்பாக, ஸ்பாட் லைட்டில் பளபளப்பாக. அவன் பார்வை சென்ற திசை கண்டு, "வருஷம் ஞாபகமில்லை, பல ஆண்டுகளுக்கு முன் இங்கே நடந்த இண்டர்போல் மகாநாட்டின்போது உங்கள் நாட்டிலிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் கொடுத்துச் சென்ற பரிசு. அந்தக் குதிரைகளின் கம்பீரத்தைப் பாருங்கள். அசாத்திய அழகு" என்றார்.

"இந்த சிற்பம் வெளியிடும் செய்தி அதை விட அழகானது" என்றான்.

"ஆமாம். சுருக்கமாக, கடமையைச் செய்; பலனைக் கருதாதே."

"இப்போ நம் கடமை என்ன?"

புன்னகை அரும்ப, "நேரத்தைச் சேமிக்க நீங்கள் விரும்புவது புரிகிறது... பென்ஜமின் பற்றிக் கேட்டிருந்தீர்கள். அவன் சூரியா சுவாமி என்ற பெயரில் மொட்டை சாமியாராக ஐரோப்பிய சுற்றுப் பயணம் மேற்கொண்டிருப்பதாகவும் தெரியப்படுத்தியிருந்தீர்கள்."

"ஆமாம்."

"அப்படி இருக்க முடியாது. இந்தக் கணத்தில் சூரியாசுவாமி பாரிஸில் இருக்கிறார். பென்ஜமின் வெனிஸில் இருக்கிறான். இருவரையுமே எங்கள் ஏஜெண்டுகள் கண்காணித்து வருகிறார்கள்!"

"என்னது!" திகைப்பும் சோர்வும் தாக்க, கால்கள் துவள, இன்பாவை ஒரு நாற்காலி ஏந்திக் கொண்டது.

(தொடரும்)

# மழை வரம் தந்தாலும் மெட்ரோ வாட்டர் மனம் வைக்கலியே!

• மீண்டும் இந்த நிலையா...?!



• கரை உயர்த்தப்பட்ட புழலேரி

படு மும்முரமாக ஒரு விஷயத்தில் ஈடுபட்டிருக்கிறது, சென்னை நகர 'மெட்ரோ வாட்டர்' நிர்வாகம். வழங்கப்படும் குடிநீரில் போதுமான அளவுக்குக் குளோரின் கலக்கப்பட்டிருக்கிறதா என்பதைக் கண்டறிவதுதான் அது. (குளோரின் அளவு போதுமான அளவுக்கு இருந்தால்தான் குடிநீரில் கலந்திருக்கும் நோய்க் கிருமிகள் முழுவதுமாக அழிக்கப்படும்.)

இதை இனி மெட்ரோ வாட்டர் அதிகாரிகள்தான் கண்டறிய வேண்டும் என்பதில்லை. யார் வேண்டுமானாலும் சுலபமாகக் கண்டறியலாம். உங்கள் வீட்டுக் குழாயில் வரும் மெட்ரோ வாட்டரில் குளோரின் சரியானபடி கலக்கப்பட்டிருக்கிறதா என்பதை நீங்களே கண்டறியலாம்.

ஒரு சிறு சோதனைக் குழாயில் குடிநீரை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் 'ஆர்தோ டொலிடின்' எனப்படும் ரசாயனக் கலவையைச் சொட்டு மருந்து ஊற்றுவது போல் ஒரு சொட்டு விட, குடிநீர் மஞ்சளாக மாறும். அப்படி மாறும் விதத்தைக் கொண்டு, உங்கள் வீட்டுக் குழாயில் வரும் குடிநீரில் எந்த அளவுக்குக் குளோரின் கலக்கப்பட்டிருக்கிறது என்பதைக் கண்டறிந்து கொள்ளலாம்.

ரசாயனக் கலவைக்கும் சோதனைக் குழாய்க்கும் எங்கே போவது என்று யாரும் எண்ண

வேண்டாம். மெட்ரோ வாட்டர் அலுவலகத்தில் போய்க் கேட்டால் இலவசமாகவே கொடுக்கக் காத்திருக்கிறார்கள்!

இதெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். குளோரின் கலப்பதற்கு முதலில் குடிநீர்த் தேக்கங்கள் நிறைந்திருக்க வேண்டாமா? அதற்கு ஏதாவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறதா?

சென்னைக்குக் குடிநீர் வழங்குகிற ஏரிகள் பூண்டி, சோழவரம் மற்றும் ரெட்ஹில்ஸ் எனப்படும் புழலேரி. இவற்றின் மொத்த கொள்ளளவு 6,702 மில்லியன் கன அடி. இந்த ஆண்டு முழுவதுமே நல்ல மழை பெய்துள்ளதால், ஏற்கெனவே நிறைந்திருக்கும் நீரின் அளவு 4,716 மில்லியன் கன அடியாக இருந்தது.

வட கிழக்குப் பருவமழை தொடங்கி விட்ட நிலையிலேயே எல்லா ஏரிகளும் நிரம்பி விட்டன. இப்போது அதிக நீரை வீணாகத் திறந்து விட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த நிலையில் அதிகமாகக் கிடைக்கும் நீரைச் சேமிப்பதற்கு அரசு ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறதா? 2,850 மில்லியின் கன அடி கொள்ளளவாக இருந்த புழலேரியின் கரையை உயர்த்தி அதை 3,300 மில்லியன் கன அடி கொண்டதாகச் செய்ததோடு சரி. வேறு எதுவுமே செய்யவில்லை. ஏரிகளின் கொள்ளளவு மட்டத்தைத் தாண்டி கிடைக்கக் கூடிய நீரெல்லாம் கடலில்தான் போய்க் கலக்கப் போகிறது!

கிருஷ்ணா நதி நீர்த் திட்டத்தின் மூலம் அடுத்த ஆண்டு சென்னைக்கு 3 டி.எம்.சி. தண்ணீர் கிடைக்குமென்று சொல்கிறார்கள். ஆனால் அதனால் மட்டுமே சென்னையின் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. குடிநீர்த் திட்டங்கள் அமுலாகும் வேகத்தைவிட மக்கள் தொகை பெருகும் வேகம் மிக அதிகமல்லவா!

உலக சுகாதார நிறுவனம் சிபாரிசுபடி ஒரு நபருக்கு நாளொன்றுக்கு 140 லிட்டர் குடிநீர் வழங்கப்பட வேண்டும். சென்னை நகரில் அதிகபட்சமாக வழங்கப்படும் தனிநபருக்கான அளவோ நாளொன்றுக்கு எழுபது லிட்டர் தான். டெல்லி, பம்பாய், கல்கத்தா நகரங்களில் வழங்கப்படும் அளவை விடவும் இது மிகக் குறைவு.

இந்த நிலையில் இலவசமாகக் கிடைக்கும் மழை நீரைச் சேமித்து வைப்பதற்குப் புதிய திட்டங்கள் தீட்டப்பட வேண்டாமா?

'மழை நீரைச் சாக்கடையில் ஓடவிடாமல் 'அறுவடை' செய்து நிலத்தடி நீராகச் சேமியுங்கள்' என்று தனியாருக்கு அறிவுரை கூறும் மெட்ரோ வாட்டருக்கும் அந்த அறிவுரை பொருந்தக்கூடியது தானே!

— பிரின்ஸ்

# “மழையில் நனைவதுகூடப் பிடிக்கும்!”

**— கனிமொழி**

**கனிமொழி. கலைஞர் மகள்; வித்தியாசமான கவிதைகள் எழுதுபவர்; ‘ஹிந்து’ நாளிதழின் உதவி ஆசிரியர்களுள் ஒருவர். சம்பிரதாயமான பத்திரிகைப் பேட்டி என்கிற முறையில் அல்லாமல், ஒரு நண்பரைச் சந்தித்துப் பேசுவது போல் பேசினால் எப்படி இருக்கும்? பேசினோம்....**

“நீங்கள் டெலிவிஷன் பார்ப்பதுண்டா?”

“உண்டு. தொடர்ச்சியாக அல்ல. முக்கியமானதாக இருந்தால் மட்டும்.”

“சன் டி.வியில் ஒளிபரப்பாகும் ‘நேருக்கு நேர்’ நிகழ்ச்சி மிகவும் பிரபல மானது...”

“பார்ப்பேன். ஆனால் அதற்காக விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தெல்லாம் பார்க்க மாட்டேன். வீட்டிலிருக்கும் போது - நினைவுக்கு வந் தால் பார்ப்பேன்.”

“மறந்து போகிற அளவுக்கு வீட்டில் என்ன செய்வீர்கள்?”

“படிப்பேன். சிறுகதைகள், நாவல்கள் நிறையப் படிப்பேன்.”

“ஆங்கிலத்திலா, தமிழிலா?”

“இரண்டிலும். இலக்கியம் மொழி சம்பந்தமானதல்ல; உணர்வு சம்பந்தமானது.”

“சமீபத்தில் நீங்கள் படித்த நாவல் எது?”

“கோவேறு கழுதைகள். இமையம் எழுதியது. ஹரிஜனக் காலனி மக்கள் மற்றும் அவர்களுக்குத் துணி வெளுக்கும் சலவைத் தொழிலாளி பற்றியது.”

“சினிமா பார்ப்பதுண்டா?”

“ம்... அண்மையில் கூட ‘குருதிப்புனல்’ பார்த்தேன். நன்றாக எடுத்திருந்தார்கள்.”

“முத்து பார்க்கவில்லையா?”

“இல்லை.”

“ஏன்? முத்து படம்தான் வெளியாவதற்கு முன்பே ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது!”

"பார்க்கக் கூடாது என்பதற்காகப் பார்க்கவில்லை என்பதல்ல. இனி பார்ப்பேன்."

"எல்லா சினிமாக்களையும் பார்ப்பீர்களா இல்லை தேர்ந்தெடுத்தா?"

"நல்ல படங்கள் என்றால் பார்ப்பேன். மோசமான படங்கள் என்றாலும் நீண்ட நாள் ஓடினால், எப்படி அது ஓடுகிறது என்கிற ஆவலிலும் பார்ப்பேன்."

"இசை பிடிக்குமா?"

"கர்நாடக இசை, இந்துஸ்தானி ரொம்பப் பிடிக்கும்."

"மேற்கத்திய இசை? சினிமாப் பாடல்கள்?"

"மேற்கத்திய இசை ஓரளவுக்குத்தான் பிடிக்கும். சினிமாவில், இசையைவிட பாடல் வரிகள் பொருள் பொதிந்ததாக இருந்தால் கேட்பேன்."

"பத்திரிகைகள் படிப்பதுண்டா?"

"கண்டிப்பாக."

"முரசொலி?"

"அப்பாவின் கடிதங்கள் மட்டும் படிப்பேன்."

"அவருடைய கருத்துக்களில் உங்களுக்கு உடன்பாடில்லாமல் போனதுண்டா?"

"உண்டு. அது பற்றி அவரிடமும் பேசுவேன். அவர் எனக்கு விளக்குவார். அந்த விளக்கங்களிலும் எனக்குச் சமாதானம் ஏற்படாமல் போவதும் உண்டு. அப்போதும் அவர் தமது கருத்தை என் மீது திணிக்க மாட்டார்."

"உங்களைக் கவர்ந்த பத்திரிகையாளர் யார்?"

"அப்படி யாரும் இல்லை."

"ஏன்?"

"எல்லா பத்திரிகையாளரும் எல்லாச் சமயங்களிலும் விருப்பு - வெறுப்பு இன்றித்தான் எழுதுகிறார்கள் என்று சொல்ல முடியாது. பத்திரிகை தருமங்கள் பற்றிப் பேசப்படுகிற அளவுக்குக் கடைப்பிடிக்கப்படுகிறது என்பதிலும் எனக்கு உடன்பாடில்லை. அதனால்தான் குறிப்பிட்டு யாரையும் சொல்ல முடியவில்லை."



"அப்பாவின் கடிதங்களை விரும்பிப் படிக்கிற மாதிரி வேறு யாருடைய எழுத்தைப் படிப்பீர்கள்?"

"துக்ளக்கில் சோவின் கேள்வி-பதில் பகுதியை."

"அவர் உங்கள் அப்பாவைக் கிண்டல் செய்து எழுதுவாரே... அப்போது உங்கள் மனநிலை எப்படி இருக்கும்?"

"அவர் கருத்தை அவர் எழுதுகிறார். அந்த வகையில் மட்டும்தான் அதை நான் எடுத்துக் கொள்வேன்."

"சோ பெரும்பாலும் பெண்களைக் கிண்டல் செய்துதான் எழுதுவார். அதைப் படிக்கும் போது உங்கள் மன நிலை எப்படி இருக்கும்?"

"சோ என்கிற தனி நபர் மட்டும்தான் பெண்கள் பற்றி அப்படியொரு கருத்து வைத்திருக்கிறார் என்பதில்லையே! பெரும்பாலான ஆண்களும் அப்படிப்பட்டவர்களாகத்தான் இருக்கிறார்கள். பெரும்பாலான பெற்றோர்கள் ஆணையும் பெண்ணையும் வெவ்வேறு விதமாகத்தான் வளர்க்கிறார்கள். எந்த பெற்றோர் தங்கள் மகன்கள் சமையல் கற்றுக் கொள்ள வேண்டுமென்று சொல்லித் தருகிறார்கள்? இந்த நிலையில் தனிப்பட்ட ஒருவரைப் பற்றி மட்டும் கருத்து சொல்வதில் எனக்கு உடன்பாடில்லை."



''நாளைக்கு நீங்க வருவீங்கன்னு இப்பதான் நினைச்சேன்! உடனே வந்து நிக்கிறீங்க! உங்களுக்கு ஆயுசு எத்தனை-ன்னு சொல்லட்டும்....?''

''?....!......''

— பெ. கலாசாமி

"சோவை சந்திக்க நேர்ந்தால் நீங்கள் என்ன கேட்பீர்கள்?"

"அவர் மகள் எப்படியிருக்கிறார் என்று கேட்பேன் - சில மாதங்கள் என்னோடு கல்லூரியில் படித்ததால்!"

"இந்தச் சமூகத்தில் நடக்கிற அக்கிரமங்களைப் பற்றியெல்லாம் படிக்கிற போது - கேட்கிறபோது என்ன தோன்றும்?"

"கோபமாக வரும். அந்த உணர்ச்சிகளைத்தான் அவ்வப்போது கவிதைகளாக வெளிப்படுத்துகிறேன்."

"நீங்கள் ஓர் அரசியல் தலைவரின் மகள் என்பதால் அவருடைய அரசியல் பாதிப்பில் நீங்களும் ஓர் அரசியல்வாதியாக வர வேண்டும் என்று எண்ணியதில்லையா?"

"அப்பாவின் இலக்கிய பாதிப்புத்தானே என்னை எழுத வைத்தது!"

"அரசியல்வாதியானால் நிறையப் புகழ் கிடைக்கும். நிறையப் பேர் நம்மைச் சுற்றி இருப்பார்களே..."

''ஆட்சியும் அதிகாரமும் நம்மிடம் இல்லாதபோது எத்தனை பேர் நம்மோடு இருக்கப் போகிறார்கள் என்பது ஒரு புறம். மறுபுறம் எல்லோருக்கும் தெரிந்த ஒரு நபராக நான் இருப்பதில் எனக்கு விருப்பமில்லை."

"நிஜமாகவா?"

"நிஜமாகத்தான். அப்படியிருக்கிற போது நமது தனிப்பட்ட சுதந்திரம் முழுவதுமாகப் பாதிக்கப்பட்டுவிடும். சுதந்திரமாகச் சாலையில் நடந்து போகக் கூட முடியாது. சொந்த வாழ்க்கையின் சுதந்திரத்தை மிகவும் நேசிக்கிற எனக்கு அதெல்லாம் ஒருபோதும் ஒத்து வராது."

"தமிழில் கவிதைகள் எழுதுகிற நீங்கள், ஆங்கில தினசரியில் வேலைக்குச் சேர்ந்தது ஏன்?"

"தமிழ்ப் பத்திரிகைகளில் வேலைக்குச் சேர்ந்தால் ஒரு பிரச்னை. ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஒவ்வொரு அரசியல் பார்வை உண்டு. அந்தப் பார்வைகள் அவ்வப்போது மாற்றிக் கொள்ளப்படுவதும் உண்டு. அப்படிப் பட்ட சமயங்களில் நான் அங்கே வேலையில் இருக்கிற போது, இருதரப்புக்கும் சில சமயங்களில் சில தருமசங்கடங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. ஆனால் 'ஹிந்து'வில் அது போன்ற சந்தர்ப்பங்களுக்கு இடமேயில்லை. அரசியலில் அது நடுநிலை வகிக்கிறது என்பதும் நான் கலைஞர் அவர்களுடைய மகளாக இருந்தாலும் அங்கு வேலை பார்க்கிற எத்தனையோ பேரில் நானும் ஒருத்தி என்பதும் எனக்கு மிகவும் வசதியாக இருக்கிறது. இதுதான் காரணம்."

''உங்களுக்கு நகைகள் அணியப் பிடிக்குமா?"

"பிடிக்காது என்று சொல்ல முடியாது. ஆனால், என்னை நானாகவே அடையாளம் காணப்படாமல், போட்டிருக்கிற நகைகள் - புடைவை மூலமாகத்தான் அடையாளம் காணப்படுவேன் என்கிற மாதிரி, எந்தச் சந்தர்ப்பத்திலும் அணிய மாட்டேன்."

"கோயிலுக்குப் போயிருக்கிறீர்களா?"

"போயிருக்கிறேன்."

"கும்பிடுவதற்காகவா?"

"இல்லை. தோழிகள் அழைக்கிறார்களே என்பதற்காக!"

"கடவுள் நம்பிக்கை உண்டா?"

"எனக்கு இல்லை. இருந்தாலும் தன்னம்பிக்கை இல்லாத ஒருவருக்குக் கடவுளைக் கும்பிடுவதன் மூலம் தன்னம்பிக்கை கிடைக்கிறது; நிஜமாகவே கிடைக்கிறது என்றால் எனக்கும் அதில் சந்தோஷம்தான். அந்தக் கடவுளின் மேல் எனக்கு வெறுப்பும் இல்லைதான். அதே சமயம், கடவுளின் பெயரால் மதங்களும் அதன் மூலம் பிரிவினைகளும் சண்டைகளும் நிகழ்வதுதான் அருவருப்பாக இருக்கிறது. எனவேதான் என்னால் மதங்களை ஒப்புக் கொள்ள முடிவதில்லை."

''ஒரு சினிமாவோ அல்லது ஒரு டாகுமெண்ட்ரியோ எடுக்கிற வாய்ப்பு உங்களுக்குக் கிடைக்குமானால் எதை மையமாக வைத்து எடுப்பீர்கள்?"

"நிச்சயமாக ஜாதி, மத, இனக் கலவரங்களை மையமாக வைத்துத்தான் எடுப்பேன். இந்தச் சண்டைகளுக்கு என்ன காரணம்? அவையெல்லாம் எப்படி அரசியலாக்கப்படுகின்றன? தங்களின் எதிர் கால அரசியல் முதலீட்டுக்காக எப்படி இந்த அரசியல்வாதிகள் ஒரு சேமிப்பு போல் பாதுகாத்து - அதே சமயத்தில் அவற்றுக்கு எதிரானவர்கள் போலவும் காட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்பதையெல்லாம் வெளிச்சம் போட்டுக் காட்டுகிற மாதிரி எடுப்பேன்."



















உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை : எஸ்டி அசோசியேடட் பில்டர்ஸ். சென்னை நகரில் டிலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்க, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.




# YESDE ASSOCIATED BUILDERS LIMITED

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/
4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333



# 'சுருக் நறுக்' என்றொரு சொல்லோவியம் - 6

**கவிதை என்பது....**

எத்தனை மென்மையான விஷயம்... காதல் மாதிரி! நூற்றுக் கணக்கான சொல்லோவியங்கள் கவிதை பற்றி ஏற்கெனவே வந்திருக்கின்றன!

அதனாலென்ன.... அலுக்கக் கூடியதா அது!

நீங்களும் முயலுங்கள்... புதிதாக, கவிதைக்கு ஒரு, ஒரு வரி விளக்கம் தீட்டி, 27.11.95க்குள் கூப்பனை அனுப்பி வையுங்கள்.

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு 'சுருக் நறுக்' விளக்கமும் ரூ. 50 பரிசு பெறும். இன்னும் 20 வாரங்கள் தொடரப்போகிற இப்போட்டியில் அதிக முறை பரிசு பெறும் ஒருவருக்கு ஒரு மெகா பரிசு காத்திருக்கிறது.

போட்டி முடிவுகளில் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

கவிதை என்பது ..............................
..............................
..............................
..............................
..............................

பெயர் : ..............................
முகவரி : ..............................
..............................
..............................
..............................

"வீட்டில் செல்லப் பிராணிகள் ஏதும் வளர்க்கிறீர்களா?"

"இல்லை. சுதந்திரமாகத் திரிய வேண்டிய அவற்றை வீட்டுக்குள் அடைத்து வைக்கிற உரிமை நமக்கு இல்லை. என்னதான் நாம் சோறு போட்டு வளர்த்தாலும் அன்பு காட்டினாலும் அவற்றின் சொந்த சுதந்திர வாழ்க்கைக்கு முன்னால் அதெல்லாம் ஒரு போதும் ஈடாக முடியாது. அதோடு சக மனிதர்களிடம் நேயம் காட்டப் பிரியப்படாதவர்கள்தான் தங்களுடைய குறையை மறைப்பதற்காக இப்படி பிராணிகள் வளர்க்கிறார்களோ என்கிற சந்தேகம் கூட எனக்கு உண்டு."

"நீங்கள் சைவமா? அசைவமா?"

"முன்பு அசைவம் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். யோசித்த போது நம் வாழ்க்கையை நாம் நேசிக்கிற மாதிரி, உரிமையோடு வாழ விரும்புகிற மாதிரிதானே மற்ற உயிரினங்களும் என்று தோன்றியது. உடனே நிறுத்தி விட்டேன்."

"நீங்கள் நிறையப் புத்தகங்கள் படிப்பதால் நிறையவும் வாங்க வேண்டியிருக்குமே?"

"சம்பளத்தில் பாதி அதற்குத்தானே செலவழிக்கிறேன்."

"நீங்களாகவே இப்படி வாங்கிச் சேர்த்த புத்தகங்கள், சுமாராக எத்தனை இருக்கும்?"

"ஐநூறு இருக்கலாம். ஆனால் அதில் ஒரு சோகம், அவற்றில் மிக நல்ல புத்தகங்கள் மிக மிகக் குறைவு என்பதுதான்."

"ஏன் அப்படி?"

"நல்ல புத்தகங்களை வாங்கிப் படித்தால் சும்மா இருக்க முடிவதில்லை. மற்றவர்களிடமும் அது பற்றிச் சொல்கிறேன். அவர்கள் படிக்கக் கேட்கிறார்கள். கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படிக் கொடுப்பனவற்றில் எத்தனை புத்தகங்கள் திரும்பி வருகின்றன என்று நினைக்கிறீர்கள்?!"

"அதே மாதிரி நீங்கள் வாங்கி வைத்திருப்பவையும் இருக்க வேண்டுமே!"

"உண்மைதான்!"

"உங்களுக்கு நிறைவேறாத ஆசை ஏதும் உண்டா?"

"நிறைய பயணம் செய்ய வேண்டும்; நிறைய இடங்களைச் சுற்றிப் பார்க்க வேண் டும்; மனிதர்களைச் சந்திக்க வேண்டும் என்கிற ஆசை நிறையவே உண்டு. சந்தர்ப்பம்தான் கிடைப்பதில்லை. அத்தனை ஏன்? மழையில் நனைவது கூட எனக்குப் பிடிக்கும். அம்மா விடுவதில்லை!"

சந்திப்பு : **இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும் படங்களும் : **யோகா**

உணவே மருந்து! மருந்தில்லா மருத்துவ ஆய்வுநூல்! மருந்தே உணவு!

பச்சைக் காய், கனிகள் உண்போம்! பற்பல நோய்களையும் போக்குவோம்!

# இயற்கை உணவே நோய் தீர்க்கும் மருந்து

இரண்டாம் பதிப்பு விலை ரூ.100

**ஆசிரியர்: இயற்கை உணவு நிபுணர்: மூ.ஆ.அப்பன்**

(இவர் இயற்கை உணவுச் சித்தர், சிவசைலம் நல வாழ்வு ஆசிரம ஸ்தாபகர், தேங்காய் பழ சுவாமிகளின் பிரதம சீடரும் தம்பியும் ஆவார்)

மருந்து மாத்திரைகள் இல்லாமல், பக்க விளைவுகள், பின் விளைவுகள் இல்லாமல் அறுவை சிகிச்சைகள் இல்லாமல் இயற்கை உணவுகளை அதாவது பச்சைக் காய், கனிகளை மட்டுமே உண்டு எப்படிப்பட்ட நோயாயினும், எவ்வளவு நாட்பட்ட நோயாயினும், மொத்தத்தில் டாக்டர்களால் கைவிடப்பட்ட தீராத நோய் எதுவாயினும் தீர்த்துக் கொள்ள முடியும் என்பதற்கு இந்நூல் ஓர் ஆதாரம்.

முடி உதிர்தல், தீராத தலைவலி, குடிப்பழக்கம், நாட்பட்ட மலச்சிக்கல், மூலம், அல்சர், அலர்ஜி, சைனஸ், ஈசனோபீலியா, அப்பெண்டிக்ஸ் போன்ற சிறிய நோய்களிலிருந்தும், தொழுநோய், இரத்த அழுத்தம், ஆஸ்துமா, நீரிழிவு, ஆர்த்தரைடிக் ரொமாட்டிஸம், வலிப்பு, காசம், புற்று, எய்ட்ஸ், இதய நோய், சிறுநீரக நோய், ஆண்மைக் குறைவு, நரம்புத் தளர்ச்சி, மலடு, மனநோய், வெண்குஷ்டம் போன்ற பெரிய நோய்களிலிருந்தும் விடுதலை பெறலாம் என்றால் நீங்கள் நம்பத்தான் மாட்டீர்கள். ஆனால் அவ்வளவும் உண்மை, உண்மை, உண்மையேதான். அனைத்துக்கும் ஆதாரம் உண்டு! உண்டு! அனுபவக் கடிதங்கள் மூலமாக உண்மைகளை வெளிப்படுத்துகிறார் ஆசிரியர்.

ஆசிரியரே ஒரு தொழு நோயாளியாக இருந்து பிணி நீங்கப் பெற்றவர் என்பதே இயற்கை உணவுக் கொள்கைக்கு ஒரு சிறந்த அத்தாட்சியாக அமைகிறது. அவர் தாம் நலமடைந்த விவரத்தையும் மேற்கொண்ட உணவு முறையையும் நூலில் விளக்குகிறார்.

எந்தெந்த நோய்க்கு எந்தெந்தக் காய், கனிகள் உண்ண வேண்டுமென்று இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும். எனவே உங்களுக்கு நீங்களே மருத்துவராகி உங்கள் நோய் எதுவாயினும் போக்கிக் கொள்ளலாம் என்பது உறுதி.

எனிமா, ஈரத் துணிப்பட்டி, ஈரமண் துணிப்பட்டி, இடுப்புக் குளியல், முதுகுத் தண்டுக்குளியல், மண் குளியல், வாழையிலைக் குளியல், சூரிய ஒளிக் குளியல், நீராவிக் குளியல், காந்த சிகிச்சை, கோதுமைப் புல்சாறு மருத்துவம், அருகம்புல் சாறு மருத்துவம், மூலிகைத் தூள் சாறு மருத்துவம், சிறுநீர் மருத்துவம் ஆகிய மருத்துவ வகைகள் யாவும் விளக்கப்பட்டுள்ளன. இயற்கை நலவாழ்வு வாழ விரும்புவோருக்கும் தீராத பிணிகளுக்கு உட்பட்டு திக்கு திசை தெரியாமல் அலைபாயும் பிணியாளர்க்கும் இந்நூல் வழிகாட்டும் ஒளிவிளக்காய் அமையும் என்பது திண்ணம்.

புத்தகத்தைப் படிக்கப் படிக்க உண்மைகளை நீங்களே உணருவீர்கள். இன்னும் என்ன யோசனை? என்னடா நோய் ஒன்றும் இல்லாதபோது இந்தப் புத்தகத்தை ஏன் வாங்க வேண்டும் என்று நினைக்கிறீர்களா? பிணியாளர்களுக்கு மட்டுமல்ல சார்! உங்களுக்காகவும்தான் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

இயற்கை உணவுகளை - பச்சைக் காய், கனிகளை உண்டு உங்களது, உங்கள் குடும்பத்தாரது, ஆரோக்கியத்தை மேம்படுத்திக் கொள்ளக் கூடாதா? நோய் வருமுன் காக்கக் கூடாதா? உங்கள் நலம் கருதி உங்களுக்காகவே இந்நூல் எழுதப்பட்டுள்ளது. நீங்கள் அன்றாடம் உண்ணும் காய், கனிகளைக் கொண்டே எப்பேர்ப்பட்ட நோய்களையும் போக்கிக் கொண்டு விடலாம். தொழு நோயே குணமாகிவிட்ட பிறகு மற்ற நோய்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? நிச்சயம் குணம் காணலாம். கவலையே வேண்டாம். இந்நூலைப் பெறுங்கள். வழிமுறைகளைக் காணுங்கள். இயற்கை உணவைக் கொள்ளுங்கள். இன்பம் அடையுங்கள். இப்போது இந்நூல் இரண்டாம் பதிப்பாக விற்பனையாகிறது. முதற் பதிப்பு நூலைப் பெற்றவர்கள் ஏகோபித்துப் பாராட்டுகிறார்கள். பலர் நோய் நீங்கி வாழ்கிறார்கள். வாயார வாழ்த்துகிறார்கள்.

தனிப் பிரதி விரும்புவோர் ரூ.100 மட்டும் M.O. மூலம் அனுப்பவும். வி.பி.பி. செலவு தனி. புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.



ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், 2, முத்துக்கிருஷ்ணன் தெரு, த.பெ.எண். 1040, பாண்டி பஜார், தி.நகர், சென்னை - 17. தொலைபேசி: 8281902.

**கிடைக்குமிடங்கள்:** ● **கோயமுத்தூர்:** ராதாமணி ஸ்டோர்ஸ், 137, ராஜவீதி. விஜயா பதிப்பகம், 20, ராஜ வீதி. வசந்தம் ஸ்டோர்ஸ், 53 கிராஸ்கட் ரோடு ● **சேலம்:** வள்ளலார் புத்தக நிலையம், 266-A, செரி ரோடு, சந்திர புக் ஹவுஸ், 5, தேர்வீதி. ஏ.வி.எஸ்.புக் சென்டர், தேர் அருகில். ● **மதுரை:** சர்வோதய இலக்கியப் பண்ணை, 32/1, மேல வெளி வீதி. மதுரைசென்ட் புக்சென்டர், 11, மேலவெளி வீதி, செந்தில் புக் சென்டர், திரு காலேஜ் ஹவுஸ், செல்வி புக் ஹவுஸ், நேதாஜி ரோடு. ● **திருச்சி:** ஷாஜி பப்ளிகேஷன்ஸ், 46-A, வெஸ்ட்பவுல்டு ரோடு. இளங்கோ புத்தக நிலையம், 32, வெஸ்ட்பவுல்டு ரோடு. ● **தஞ்சாவூர்:** முருக புத்தக நிலையம், மணிக்கூண்டு. ● **திருநெல்வேலி:** எம்.ஆறுமுகம் பிள்ளை அண்டு சன்ஸ், டவுன்ரோடு. ● **ஈரோடு:** வேலா புக் கம்பெனி, 5 அக்ரஹாரம் தெரு, ராஜ் புக்சென்டர், 1021 பிரப் ரோடு.

வேந்தர் பதவி

எனக்கு நானே கிரீடம் சூட்டிக்கிறேன்... யார் கேட்கிறது?

சட்டப் பல்கலைக் கழகம்

நீதிமன்றங்கள் அவமதிப்பு

சட்டம் ஒழுங்கு சீர்குலைவு

சட்டங்கள் புறக்கணிப்பு

அரசு விதிமுறைகள் மீறல்



1995 நவம்பர் 19
யுவ கார்த்திகை 3
மலர் : 54
இதழ் : 16

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பிரதமரின் பல்டியும் அப்துல்லாவின் கோபமும்!

**கா**ஷ்மீர் மாநிலம் இந்தியாவின் செல்லப்பிள்ளை! அண்டை நாடான பாகிஸ்தானின் ஊடுருவல் காரணமாகவும் அதைத் தவிர்க்க அரசு மேற்கொள்ளும் முயற்சிகள் காரணமாகவும் காஷ்மீர் மக்களின் சுதந்திரம் பாதிக்கப்படுகிறது. அதற்கு ஈடுசெய்யும் வகையாக, உணவு தானியம் தொடங்கி, ஏராளமான பொருள்கள் மலிவு விலையில் மத்திய அரசால் வழங்கப்படுகின்றன.

காஷ்மீர் மக்களின் சுயநிர்ணய உரிமையைப் பாதுகாக்க, அங்கே முறைப்படி தேர்தல்கள் நடந்தாக வேண்டும். உலக அரங்கில் பாகிஸ்தானின் பிரசாரத்தை முறியடிக்கவும் இது அவசியமாகிறது.

இதை உணர்ந்துதான் பிரதமர் தேர்தல் திட்டத்தை அறிவித்தார். தேர்தல் கமிஷன் நேரில் சென்று பார்த்து, தேர்தல் நடத்த ஏதுவான சூழ்நிலை அங்கு நிலவவில்லை என்று அறிவித்து விட்டது. காங்கிரஸ் தவிர இதர அரசியல் கட்சிகளும் தேர்தல் நடத்தக்கூடாது என்றே கருதுகின்றன.

காஷ்மீரில், காங்கிரஸ் தவிர, ஜனநாயகப் பற்றுள்ள மற்றொரு கட்சி நேஷனல்




கான்ஃபரன்ஸ். அதன் தலைவர் ஃபாரூக் அப்துல்லா, காலஞ்சென்ற காஷ்மீரத் தலைவர் ஷேக் அப்துல்லாவின் மகன். இன்றைக்கு காஷ்மீரில் செல்வாக்கு மிகுந்த அரசியல்வாதி. தேர்தல் நடத்தும் முன்னரே, காஷ்மீருக்குக் கூடுதலான சுயாட்சி உரிமைகளைத் தருவதாக மத்திய அரசு உறுதியளிக்க வேண்டும் என்று வாதிடுகிறார். அந்த உரிமைகளை இப்பொழுதே பட்டியலிட்டுத் தெளிவுபடுத்தக் கோருகிறார். சுயாட்சி உரிமை குறித்த உத்தரவாதம் தரப்படாவிட்டால், தமது கட்சி தேர்தலில் போட்டியிடாது என்றும் அறிவித்துள்ளார்.

நேஷனல் கான்ஃபரன்ஸ் பங்கேற்காத காஷ்மீர் தேர்தல் என்பது மாப்பிள்ளை இல்லாத கல்யாணம் போல் அர்த்தமற்றதாக இருக்கும்.

காஷ்மீரின் அரச பரம்பரையைச் சேர்ந்தவரும், காங்கிரஸ் பாரம்பரியத்தில் வந்தவரும், மத்திய அமைச்சராக இருந்தவருமான கரன் சிங் கூட, ஃபாரூக்கைப் போலவே அதிருப்தி தெரிவித்துள்ளார்.

ஃபாரூக் அப்துல்லா மூச்சுக்கு மூன்று முறை சுட்டிக் காட்டுவது போல், காஷ்மீருக்குச் சுயாட்சி கொடுப்பது பற்றிப் பேசும் போது பிரதமர், 'வானமே எல்லையாக இருக்கும்' என்று குறிப்பிட்டவர்தான்.

அதே பிரதமர் இப்போது தயங்கி, யோசித்து, 'தேர்தல் நடந்து முடியட்டும்; அப்புறம் ஆட்சிக்கு வரும் புதிய அரசு விவாதங்கள் நடத்தி, சுயாட்சி உரிமைகளைப் பெறலாம்' என்கிறார்.

பிரதமரின் பல்டிக்குக் காரணம், வரவிருக்கும் பொதுத் தேர்தலைக் குறித்த அச்சம்தான்.

ஃபாரூக் அப்துல்லாவுக்கு முழு திருப்தி அளிக்காத இந்தத் திட்டத்தையே பி.ஜே.பி.




ஏகமாகக் கண்டித்து விமர்சித்திருக்கிறது. இந்தத் திட்டத்தை எதிர்த்துப் போராடப் போவதாகவும் அறிவித்துள்ளது.

இன்னும் கூடுதல் சுயாட்சி குறித்து திட்டவட்டமாக உத்தரவாதம் கொடுத்து விட்டால், பி.ஜே.பி. அதையே பொதுத் தேர்தல் பிரசாரத்தில் துருப்புச் சீட்டாக்கி விடும். முஸ்லிம் மாநிலமான காஷ்மீருக்கு மட்டும் தாராளமாய் சுயாட்சி சலுகைகள் தரப்பட்டுள்ளன என்று மத உணர்வைத் தூண்டும்படி பேசி, தேர்தல் பிரசாரம் நடத்தும்.

இதற்குப் பயந்துதான் பிரதமர் காஷ்மீர் சுயாட்சி குறித்து அடக்கி வாசித்திருக்கிறார்.

அவருடைய் தர்மசங்கடம் தீர ஒரு வழி இருக்கிறது. காஷ்மீருக்கு மட்டுமின்றி, அனைத்து மாநிலங்களுக்குமே சுயாட்சி உரிமைகளை அதிகரிப்போம் என்ற கொள்கைரீதியான அறிவிப்பை வெளியிடலாம். அயல்நாட்டு விவகாரங்கள், ராணுவம், நோட்டு அச்சடித்தல் போன்ற ஒரு சில அம்சங்கள் தவிர, மற்ற விஷயங்களில் 'சுயாட்சி வழங்குவோம்' என்று உறுதி தரலாம்.

அப்படிச் செய்தால், பி.ஜே.பி.யின் எதிர்ப் பிரசாரத்துக்கு இடமின்றிப் போய்விடும் என்பதுடன் அனைத்து மாநில மக்களின் மனம் கனிந்த ஆதரவும் காங்கிரஸுக்குக் கிடைக்கும். நாடாளுமன்றத் தேர்தலில் மட்டுமின்றி, மாநில சட்டசபைக்கான தேர்தல்களிலும் காங்கிரஸின் வெற்றி வாய்ப்புகள் பிரகாசமாகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக, மத்திய அரசை அண்டிப் பிழைக்காத ஆரோக்கியமான சூழல், மாநிலங்களில் தோன்றும். அவற்றின் முன்னேற்றம் போட்டி போட்டுக் கொண்டு சுறுசுறுப்பாக நடைபெறும்.

# திட்டமிட்ட முன்னேற்றத்திற்கு...
# திரு.வி.க. நகர் பெனிபிட் ஃபண்ட் லிமிடெட்

பெரம்பூரிலிருந்து 2கி.மீ. தூரத்திலும், பெரியார் நகர், கொளத்தூருக்கு அருகாமையிலும், முக்கியமான சாலைகளை இணைக்கும் லிங்க் சாலைக்குப் பக்கத்திலும் அமைந்துள்ள திரு.வி.க.நகரில் 1989ல் ஆரம்பிக்கப்பட்ட திரு.வி.க. நகர் பெனிபிட் ஃபண்ட் லிமிடெட் பற்றித் தெரிந்து கொள்வோம்.

**தலைமை அலுவலகம் :**
**10, 2வது தெரு ஆண்டாள் அவின்யு,**
**திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்)**
**சென்னை - 82**
**போன் : 5378690**

இந்த நலநதி நிறுவனம் ஆரம்பிக்க காரணமாயிருந்தவர் திரு. A.M.O சிரேஷ்டி அவர்கள்தான். தான் மட்டுமின்றி தனது வாரிசுகளையும் தன் பாதையில் நடத்திச் சென்ற பெருமை இவருக்குண்டு. தீக்குச்சிக்கு வயதில்லை. எங்களைப் பொறுத்தவரை தீக்குச்சி போன்றவர் எங்களது தந்தை என்கிறார்கள் திரு A.M.O ஹரிஹரேஸ்வர ராவ் B.Com., ஆக, அவர்களும் திரு A.M.O குரு நாராயணராவ் அவர்களும்.



* A.M.O ஹரிஹரேஸ்வர ராவ் மேனேஜிங் டைரக்டர்

நலநிதி நிறுவனத்தை 12 டைரக்டர்கள் பொறுப்பாக கவனித்துக் கொண்டாலும் முழு நேர பொறுப்பாளராக இருப்பவர்கள் மூவரே. அவர்கள் திரு. ஹரிஹரேஸ்வராரால் (Managing Director) பாரீஸ் கிளையையும் பொது நிர்வாக பொறுப்பும் கவனித்துக் கொள்கிறார்.

**பாரீஸ் கிளை :**
**8/2 ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, (பூக்கடை எதிரில்)**
**சென்னை - 108.**
**போன் : 565760**

திரு A.M.O. குருநாராயணராவ் தலைமை நிறுவனத்தையும், சொத்துக்களின் மேல் கொடுக்கும் கடன் விவகாரங்கள் அனைத்தையுமே கவனிக்கிறார். திருமதி. கீதாராஜன் அவர்கள் தி.நகர் ரங்கநாதன் தெருவில் இருக்கும் கிளையை கவனித்துக் கொள்கிறார்கள்.

**தி. நகர் கிளை:**
**20, ரங்கநாதன் தெரு, தி. நகர்,**
**சென்னை - 17.**
**போன்: 4344324.**

ஆரம்பித்த நாட்களில் நலநதிக்கு வரவேற்பு குறைவாக இருந்தது. தற்போது கடந்த 3 ஆண்டுகளாக மக்கள் நலநிதியைப் பெரிதும் விரும்புகிறார்கள். முன்னேற்றம் நிறைய அடைந்துள்ளது என்கிறார்கள்- இந்தியாவின் தலைசிறந்த தலைவர்களில் ஒருவரான திரு.வி.கல்யாணசுந்தரனார் பெயரைத் தாங்கிய திரு.வி.க. நகர் நலநிதி நிறுவனத்தார்.

பலர் நலநிதியை சீட்டுக் கம்பெனி என்று தவறாக மதிப்பிட்டு பண முதலீடு செய்ய பயப்படுகிறார்கள். சொல்லப்போனால் பைனான்ஸ்



* A.M.O குரு நாராயணராவ் டைரக்டர்

கம்பெனிகூட முற்றிலும் மாறுபட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

சீட்டுக் கம்பெனியில் சீட்டு என்பது பலபேர்



* தலைமை அலுவலக பணியில்

ஒன்று சேர்ந்து மாதாந்திரமாக குறிப்பிட்ட தொகை செலுத்தி ஏலம்போட்டு ஒருவருக்கு கமிஷன்போக மொத்தமாக தருவார்கள். பைனான்ஸ் கம்பெனியில் வாங்கிய டெபாசிட் பணத்தை பொதுவாக வாகனங்கள், இதர நுகர்ப் பொருட்கள் வாங்க மற்றும் நம்பிக்கை யின் பேரில் கடன் தருவார்கள்.

நலநிதியில் நகைகள் பேரில் அசையாத சொத்துக்கள் பேரில் மட்டும்தான் வாங்கிய டெபாசிட்டுகளை உபயோகப்படுத்த முடியும். இந்த வித்தியாசங்களை மக்கள் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

எங்கள் நலநிதியில் ஆறு விதமான டெபா சிட் திட்டங்கள் உள்ளன. வயதானவர்களுக்கு பயன்படுகிறமாதிரியான ஒரு திட்டம். இதில் முதலில் ரூ.10,000/- போட்டால் (குறைந்தது 1 வருடம்) அதற்கு மாதத்தவணை முறையில் 21% வட்டி கொடுக்கப்படுகிறது.

வயதானவர்களுக்குத் திரும்ப முதலீடு செய் யும் திட்டம் (Reinvestment). டெபாசிட் செய்த வர்கள் மாதாமாதம் வட்டி வாங்காமல் குறிப் பிட்ட காலம் முடிந்தவுடன் கூட்டு வட்டி விகிதத் திலே வாங்கிக் கொள்ளலாம். இதற்கு 21% தான். இத்திட்டத்தில் 40 மாதத்தில் டெபாசிட் பணம் இரட்டிப்பாகி விடுகிறது.

குறுகியகால டெபாசிட் திட்டம்- (Short term) எந்த வயதினரும் டெபாசிட் பண்ணலாம். 45 நாட்கள் முதல் 89 நாட்கள் வரை 15% வட்டியும், 90லிருந்து 179 வரை 16% வட்டியும் 180லிருந்து 364 வரை 17% வட்டியும் கொடுக் கிறோம். இதன் முக்கிய சிறப்பு என்னவெனில் எத்தனை நாட்களுக்குத் தேவையோ அந்த நாளைக் குறிப்பிட்டே பணம் போடலாம். குறைந் தது ரூ.5000/- டெபாசிட் பண்ணனும். காலம் முடியற நேரத்தில் வட்டி கொடுக்கிறோம்.

குறிப்பிட்ட கால டெபாசிட் திட்டம் (Fixed Deposit) இதில் யார் வேண்டுமானாலும் பணம் போடலாம். இதில் ஒரு வருடத்திற்கு 18% வட்டி, 2 வருடத்திற்கு 19% வட்டி, 3 வருடத்திற்கு 20% வட்டி, 4 வருடத்திற்கு 21% வட்டியும் கணக்கிடப்பட்டு கொடுக்கப்படுகிறது. குறைந்த அளவு முதலீட்டுத் தொகை ரூ. 5000/- மாதாமாதம் வட்டிக்குரிய வாரண்டுகளை முன்னாலேயே கொடுத்து விடுகிறோம். கரூர் வைஸ்யா வங்கியிலும், யூனியன் வங்கியிலும் வழங்குகிறோம். வாரண்டுகளை அகில இந்தியா வில் எந்த ஊரிலும், எந்தக் கிளையிலும் கொடுத்தாலும், வாரண்டுகளுக்குப் பணம் பட்டுவாடா ஆகிவிடும்.

மறுமுதலீடு என்கிற ஒரு திட்டம். இதில் குறைந்த அளவு ரூ. 1000/- முதல் போடணும். 12 மாதமானால் இந்தத் தொகை ரூ. 1195/- ஆகிறது. 24 மாதத்தில் ரூ. 1455/- 36 மாதத் தில் ரூ. 1810/- 42 மாதத்தில் பணம் இரட்டிப் பாகிறது (ரூ.2000/-)

Recurring Deposit திட்டம் ஒவ்வொரு



* தலைமை அலுவலகத்து ஊழியர்கள்

மாதமும் குறைந்தது ரூ.100/- போட் டார்களானால் வருஷ முடிவில் ரூ. 1320/- கிடைக்கும். கட்டிய தொகை ரூ. 1200/- வட்டி ரூ. 120/-.

சேமிப்பு கணக்கு திட்டத்தில் ஒருவர் பணத்தை 4 நாட்கள் வைத்தார்களென்றால் அந்த 4 நாட்களுக்கு மட்டும் அந்தத் தொகைக் கான வட்டி தருகிறோம். அதை நாங்கள் செப்டம்பர், மார்ச் மாதங்களின் இறுதியில் அவர்களுடைய கணக்கில் சேர்த்து எழுதி



• பாரிமுனை அலுவலகத்து ஊழியர்கள்

பொதுவாக பைனான்ஸ் கம்பெனி யிலே பண முதலீடு செய்பவர்களை டெபா சிட்டர்கள் (Depositors)என்றுதான் சொல்லுவார்கள். ஆனால் நலநிதியில் மட்டும்தான் பணம் கட்டுபவர்களை மெம்பர்ஸ் (Members)என்று சொல்லு கிறோம். ரூ.5000க்கு குறையாமல் ஷேர் வாங்கியவர்களுக்கே பைனான்ஸ் கம் பெனியின் கணக்கு வழக்குகள் முழுக்க தெரியும். ஆனால் நலநிதியில் 1 ஷேர் (10ரூ) வாங்கிவைத்திருந்தால்கூட எல்லா விவரமும் தெரியும். வருடாவருடம் எல்லா மீட் டிங்கிற்கும் அழைப்பு விடுத்து வருடாந்திர தாக்கீதல்கள் அனைத்தும் விவரமாகக் கொடுக் கப்படும். தனி நபர்கள் மற்றும் பார்ட்னர்ஷிப் நிறுவனங்கள் டெபாசிட்டுகள் நிறைய வாங்கு கிறார்கள். அவர்கள் யாருக்குமே கணக்குக் காட்ட வேண்டியதில்லை. டிபாசிட்டாக வாங்கு கின்ற அந்தப் பணத்தை எதற்கு வேண்டு மானாலும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். ரியல் எஸ்டேட்டிலே உபயோகப்படுத்தலாம். ஜுவல்லரி வியாபாரத்தில் வைக்கலாம். அல்லது சொந்தத்திற்கு உபயோகப்படுத்தலாம் கணக் குக் காட்ட வேண்டிய அவசியமில்லை. நலநிதி-டெபாசிட் பணத்தில் என்னவெல்லாம் செல வழிக்கிறோம், எப்படியெல்லாம் உபயோகப் படுத் துகிறோம் என்று புள்ளி விவரமான கணக்கு துல்லியமாகக் காட்டுகிறோம். இது முக்கியமான வித்தியாசம்

எல்லாவற்றிற்கும் கடன் கொடுத்தால் பொறுப்புகள் அதிகமாகும். பிரச்னைகள் நிறைய சந்திக்க வேண்டியிருக்கும். (உ-தா) வாகனங் களுக்குக் கடன் கொடுத்தால் விபத்து நேர்ந்து விட்டால் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி பின்னாடி அலைவதும், பார்ட்டியிடம் கடன் வசூலிக்கவும் நேரம் சரியாக இருக்கும். வசூல் செய்வதற்காக தனியாக ஆள் நியமிக்கணும். ஆனால் நலநிதி யில் அளிக்கப்படும் நகைக் கடனும், சொத்துக் கடனும் நாமாக சென்று வசூல் செய்ய வேண் டிய அவசியமில்லை. சொந்தக்காரர்களே தானாகவே வந்து கடன் வாங்குவ தோடு, அதை தீர்க்கும் பொறுப்பும் தானே ஏற்றுக் கொள்வார்கள். இதில் வரும் டெபாசிட் பணம் மீந்தால் கூட வேறு எதிலும் முதலீடு செய்யக்

விடுவோம். 12% வட்டி அளிக்கப்படுகிறது.

இந்தத் திட்டத்தில் ஏழைகள்கூட மொத்தப் பணம் போடமுடியாவிடில் ரூ.10, ரூ.20 என்று அவ்வப்போது வங்கியில் போடுவது மாதிரி போடவோ, எடுக்கவோ செய்யலாம்.

நாங்கள் நகைகள் பேரில் கடன் தருகிறோம். நகைக்கடன் இவ்வளவு என்ற கணக்கில்லை. ரூ. 1000க்கு குறைந்து யாருக்கும் கொடுப் பதில்லை. சின்னசின்ன கடன் விவகாரங்களை கம்பெனி ஊழியர்களே பரிசீலித்து விடுவார்கள்.

சொத்து பேரில் கடன் வேண்டுபவர்கள் நாங்கள் நேரடியாக விசாரித்து, லீகல் அட் வைஸர், சொத்து மதிப்பீட்டாளர் ஆகியோர், அவர்கள் சொத்தில் எந்தவிதமான வில்லங் கமும் இல்லை என்பதை ஊர்ஜிதப்படுத்தியபின் தாமதப் படுத்தாமல் 10,15 நாட்களுக்குள் கடன் தொகை வழங்கப்படுகிறது. ஒருவருடைய வருமானத்தை நம்பி கடன் கொடுப்பதில்லை. வருமானம் நிலையானதல்ல. சொத்துக்களுக் கும் மார்க்கெட் மதிப்பைக் காட்டிலும் குறைத்து மதிப்பிட்டு அதிலும் 65%தான் கடனாகத் தரு கிறோம். இதனால் கடன் வாங்கியவர்களால் சில சமயம் பிரச்னை ஏற்பட்டால் சொத்தை ஏலம்விட்டு நிறுவனம் பாதிப்பு அடையாதவாறு பணம் திரும்ப பெறப்படும்.

முன்னாடி சொத்துக்களின் பேரில் கடன் குறைந்த அளவு ரூ.20,000 கொடுத்துக் கொண் டிருந்தோம். இப்போதெல்லாம் குறைந்த அளவுத் தொகை கடனாக ரூ. 50,000ம், அதிக அளவு ரூ.10,00,000 கொடுக்கப்படுகிறது.

மற்ற பைனான்ஸ் நடைமுறைவேறு. பெனிபிஃட் பண்டு(நலநிதி) நடைமுறை வேறு.

கூடாது. வங்கியில் தான் போட வேண்டும். சில நேரங்களில் டிபாசிட் செய்பவர்கள் பாதியில் (தவணைகாலத்திற்கு முன்னமே) பணம் கேட் பார்கள். அவர்களுக்குக் கம்பெனி சட்டத்திட் டப்படி உடனடியாக திருப்பிக் கொடுப்போம். இந்த மாதிரி நேரத்தில் எப் போதும் வங்கியில் பணம் சேமிப்பில் இருந்து கொண்டே இருப்ப தால் நாணயமாக நடந்து கொள்ள முடிகிறது. எங்கள் நலநிதியில் டிபாசிட் செய்பவராயினும் கடன் வாங்குபவராயினும் பாகுபாடின்றி நல்ல முறையில் கவனிக்கிறோம். சிபாரிசுகள் ஏற்றுக்



• நவீன வசதி செய்யப்பட்ட தி.நகர் கிளை.

கொள்ளப்படுவதில்லை. நல்ல முறையில் ஒரு நிதி கம்பெனி நடக்க வேண்டுமானால் டிபாசிட் டர்கள் பணம் நல்லமுறையில் பாதுகாக்கப்பட வேண்டும்.

கம்பெனியின் வரவு செலவைப் பார்த்த பின்னரே விளம்பரங்களோ மற்ற செலவுகளோ கம்பெனி பாதிக்காத முறையில் செலவிடப்படும். அன்பளிப்பு, ஊக்கத் தொகை அனைத்துமே கம்பெனி சட்டத்தைப் பொறுத்தே டெபாசிட் தாரர்களுக்கு வழங்கப்படும். எங்களிடம் 10,000க்கும் மேற்பட்ட அங்கத்தினர்கள் உள் ளார்கள். அங்கத்தினர்கள் என்றால் பணம் போட்டவர்களாகவும் இருக்கலாம். கடன் வாங்கியவர்களாகவும் இருக்கலாம். யார் யார் எங்களுடன் வியாபாரத் தொடர்பு செய்கிறார் களோ அவர்கள் அங்கத்தினர்கள் ஆகிவிடு கிறார்கள். இப்போது எங்களிடம் மொத்த டெபாசிட் 10 கோடியை அடைந்து கொண்டிருக் கிறது. சென்ற மார்ச் வருடாந்திர தாக்கீது பிரகாரம் ரூ.8கோடி இருப்பு இருக்கிறது. இப் போது வருகின்ற மார்ச் மாதத்திற்குள் 12 கோடி கள் பூர்த்தியாகி விடும் என்று எதிர் பார்க் கப்படுகிறது. இப்போதைய நலநிதி திட்டம் அங் கத்தினர்களுக்கு போதுமான திருப்தியை அளித்துள்ள. புதிதாக ஏதேனும் அவர்கள் விரும்பினால் அறிமுகப்படுத்துவோம். அங்கத் தினர்களிடம் நல்ல பெயரை சம்பாதித்து விட் டால் டெபாசிட்டை தேடிப்போக வேண்டிய அவ சியமில்லை. தானாகவே நம்மைத் தேடி வரும். பெனிபிட் ஃபண்ட் நடத்துவதற்கு நிறைய படிப் பறிவும், அனுபவமும் தேவை. பணத்தை வாங்கு வதும், கொடுப்பதும் மட்டும் வேலை இல்லை. கம்பெனியில் உள் நிர்வாகங்கள் பார்க்க வேண்டியிருக்கும். எல்லாவற்றிற்கும் ஆலோ சகரை மட்டுமே சார்ந்து இல்லாமல் நாமே அதைப் படித்து தெரிந்து கொள்ளனும். பணம் பட்டுவாடாவிற்குத் தகுந்தமாதிரி பத்திரங்கள் தயார் செய்வது, போன்று எல்லாவற்றையும் செய்வதற்குத் தெரிந்து வைத்திருக்கனும். எங்களது 3 கிளைகளிலும் Fax வசதி இருக் கிறது. இதனால் கம்பெனி நிர்வாகம் வேகமாகச் செயல்பட வசதியாக உள்ளது.

திரு.வி.க.நகரில் சமீபத்தில் புதிதாக வாங்கப்பட்ட இடத்தில் நவீன வசதிகளோடு புதிதாகக் கட்டப்படும் இடத்திற்குக் கூடிய விரைவில் தலைமையகம் மாறப்போகிறது. வாடிக்கையாளர்களின் திருப்தியே எங்களது வெற்றி. எங்கள் நலநிதி பணியாளர்கள் அனை வரும், ஆடிட்டர்கள், ஆலோசகர்கள், டைரக் டர்கள் அனைவரது ஒத் துழைப்பு காரண மாகவும், எங்கள் தந்தையின் வழி நடத்தலின் காரணமாகவும் கம்பெனி வெற்றிநடை போடு கிறது.

மக்கள் சேமிக்க நினைத்தால் மட்டும் போதாது. பயனுள்ளதாகவும் இருக்கனும். விளம்பரங்களை மட்டும் பார்த்து எந்த கம் பெனியிலும் டெபாசிட் பண்ணக்கூடாது. அதி கமான வட்டிக்கு ஆசைப்படக்கூடாது. சில பைனான்ஸ் கம்பெனிகள் ரிசர்வ் வங்கி ரூல்ஸ் கூட தெரியாமல் இருக்கும். அந்த மாதிரியான கம்பெனிகளில் பணமுதலீடு செய்யக் கூடாது. கணக்கு வழக்குகள் சரிவர கொடுக்கும் தரமான கம்பெனிகளில் மட்டுமே முதலீடு செய்து மக்கள் நன்மையடையவேண்டும்.

• உமாசங்கர் புகைப்படம் வெளியிட (அவர்) விரும்பாத சூழலில் அவரது ஆதர்சர் குர்னிகால்சிங் படம்.



# பழிவாங்கப்பட்ட ஐ.ஏ.எஸ். அதிகாரி!

சந்திரலேகா, கே. சுந்தரம், ராமமூர்த்தி என்று வரிசையாக அ.தி.மு.க. அரசால் பழிவாங்கப்பட்ட ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் லிஸ்ட்டில் புதிதாகச் சேர்ந்திருப்பவர் உமாசங்கர் ஐ.ஏ.எஸ்.

பாளையங்கோட்டைக்காரரான இந்த இளம் ஐ.ஏ.எஸ். அதிகாரி, கடந்த இரண்டு ஆண்டுகளில் அநியாயமாக நான்கு முறை மாற்றல் செய்யப்பட்டவர். நியாயம் கோரி, மத்திய நிர்வாக நீதிமன்றத்துக்குச் சென்றிருக்கும் இவர், தாம் மதுரை கூடுதல் கலெக்டர் பதவியிலிருந்து மாற்றப் படக் காரணம் 'அமைச்சர் செல்வ கணபதியின் ஊழ லுக்குத் துணை போகாததுதான்' என்று புகாரில் குறிப் பிட்டிருக்கிறார்.

"உமாசங்கரின் குற்றச்சாட்டை ஒதுக்கித் தள்ளாமல், முதல் வர் உடனடியாக செல்வகணபதியை டிஸ்மிஸ் செய்ய வேண் டும்!" என்று அறிக்கை வெளியிட்டிருக்கிறார் பழுத்த அரசியல் வாதியான சி. சுப்பிரமணியம்.

ஜவகர் வேலை வாய்ப்புத் திட்டப்படி, சுடுகாடுகளில் கொட்டகைகள் கட்ட, மத்திய அரசு நிதி உதவி செய்கிறது. உள்ளூர் மக்களுக்கு வேலை தருவதுதான் இத்திட்டத்தின் அடிப் படை நோக்கம். மதுரையில், இத்திட்டத்தைச் செயல்படுத்தும் பொறுப்பு கூடுதல் கலெக்டர் உமாசங்கருடையதாக இருந்தது.

உள்ளூர் மக்களுக்கு வேலை கிடைக்க வேண்டிய இத்திட்டத் தில், அமைச்சரும் சில ஆளும் கட்சி ஆட்களும் சேர்ந்து, சில 'வேண்டப்பட்ட' வெளியூர் கூட்டுறவு சொஸைட்டிகளுக்கு வேலை கொடுக்க வற்புறுத்தியிருக்கிறார்கள்.

இந்த சொஸைட்டிகளில் சில, சரியாகச் செயல்படா தவை. வேலைக்கான உத்தரவைப் பெற்றுக் கொண்ட சேலம் சொஸைட்டி ஒன்று, specification படி கொட்டகை கட் டாமல், தரமற்ற முறையில் கட்டியிருக்கிறது.

காற்றடித்தால் விழுந்து விடக்கூடிய அந்தக் கொட் டகைக்குப் பணம் தர மறுத்துவிட்டதால் உமாசங்கர் தூக்கியடிக்கப்பட்டிருக்கிறார்!

நடக்க இருக்கும் தெற்காசிய விளையாட்டுப் போட்டிகளுக் குக் கூடுதல் இயக்குநராகத் தற்சமயம் பணிமாற்றம் செய்யப்பட் டிருக்கும் உமாசங்கரைச் சந்தித்தபோது, "என்னிடம் எதுவும் கேட்காதீர்கள்! சொல்ல வேண்டியதை கோர்ட்டில் சொல்லி யிருக்கிறேன்!" என்றார்.

ஆனால், "உமாசங்கர் ஐ.ஏ.எஸ். அதிகாரிகளின் நடத்தை விதி களை மீறி பத்திரிகையாளர்களுக்குப் பேட்டி கொடுக்கிறார்" என்று மதுரை கலெக்டர் சம்பத் அவர் மீது பாய்ந்திருக்கிறார்!

"உமாசங்கர் கோர்ட்டில் தாக்கல் செய்த பிரமாணப் பத்திரத் தில் இருந்து பத்திரிகைகள் எடுத்துப் போட்டதற்கு அவர் எப்படிக் காரணமாவார்?" என்று சில ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் கேட்கிறார் கள். இதற்கிடையே உமாசங்கருக்கு அதிகாரிகளிடையே ஆதரவு கூடி வருகிறதாம். பலர் வெளிப்படையாக வராவிட்டாலும் எதேச்சாதிகார அரசைத் துணிந்து எதிர்த்ததற்காக ரகசியமாகப் பாராட்டுகிறார்களாம்!

உமாசங்கர் பிளஸ்டூ படித்தபோது நெல்லை உதவி கலெக்ட ராக இருந்த குர்னிகால்சிங், சில ஆக்கிரமிப்புகளை பலத்த எதிர்ப்புகளுக்கிடையே அகற்றியிருக்கிறார். துணிவுடன் நியாயத் துக்குப் போராடிய அந்த அதிகாரிபோல் தாமும் எதிர்காலத்தில் இருக்க வேண்டும் என்று உமாசங்கர் விரும்பியதாக அவர் நண்பர்கள் கூறு கிறார்கள்.

இதெல்லாம் ஒருபக்கம் இருக்க, நியாயமாகச் செயல்பட நினைக் கும் ஓர் அதிகாரி, ஆளும் கட்சியின் அராஜகப் போக்கால் பாதிக்கப் படும் போது எப்படி பரிகாரம் காண்பது?

"முதலில் தலைமைச் செயலாள ரிடம் முறையிட வேண்டும். அவர் தான் மாநிலத் தி லு ள் ள ஐ.ஏ.எஸ். அதிகாரிகளைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பில் இருப்பவர். நிவாரணம் கிடைக்கா விடில் முதல்வரிடம் முறையிட லாம். அப்படியும் பாதிக்கப்பட்ட அதிகாரிக்கு நியாயம் கிடைக்கா விடில் மத்திய நிர்வாக நீதிமன்றத் துக்குச் செல்லலாம். முதலில் இந்த வழிமுறைகளைப் பார்த்துவிட்டுப் பிறகு கோர்ட்டுக்குப் போவது நல் லது. அப்படிச் செய்யாமல் கோர்ட் டுக்குப் போகும் பட்சத்தில் நாளை நீதிமன்றத்தில் கேள்வி வருமானால் பதில் சொல்லத் தயாராக இருக்க வேண்டும்" என்று சொல்கிறார் ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி யான வேதநாராயணன்.

இந்த ஒழுங்குமுறைகள், சட்ட சம்பிரதாயங்கள் எப்போதுமே நியாயமாகச் செயல்பட விரும்பும் அதிகாரிகளின் மீதுதான் அதிகமாக நிர்ப்பந்தப்படுத்தப்படும் என்பது எல்லோருக்கும் தெரிந்த ஒன்று தானே!

- ப்ரியன்

இந்த வருஷம் ஆகஸ்ட் பதினைந்து சுதந்தர தினத்தன்று, நம் நாட்டில் 'INTERNET' என்கிற சர்வதேச கம்ப்யூட்டர் இணைப்பு வசதி அறிமுகமாகியிருக்கிறது.

ரொம்ப முக்கியமான இந்த சமாசாரத்தை ஒரு பொருட்டாகக் கொள்ளாமல் நாம் வழக்கம் போல் சாவகாசமாகப் படுக்கையைச் சுற்றி வைத்து, விவிதபாரதியில் 'இந்திய நாடு என் நாடே...' காதில் விழ, பத்திரிகையில் தலைவர்களின் சுதந்தர தினச் செய்திகளை அவசரமாகப் புரட்டி, கேபிள் டி.வியில் மத்தியான சினிமாப்பட விவரம் பார்த்து, கொடியேற்றி, ஆரஞ்சு மிட்டாய் வாங்கக் குழந்தையைப் பள்ளிக்கூடத்தில் கொண்டு விட்டு, வரும் வழியில் கால் கிலோ வெங்காயம் வாங்கிக் கொண்டு...

என்ன மாதிரியான சமாசாரம் இந்த இன்டர்நெட் என்று பரிச்சயப்படுத்திக் கொள்வதற்கு முன், கம்ப்யூட்டர் வலைப்பின்னல் (Net work) பற்றிக் கொஞ்சம்...

ஒரு முப்பது வருடம் முந்தி, கம்ப்யூட்டர்கள் இத்தனை பரவலாக இல்லை. 'தானுண்டு, தன் வேலையுண்டு' என்று இருந்த அவற்றுக்கு இடையே தகவல் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்றால், கையில் மின்காந்த நாடாவைத் தூக்கிக் கொண்டு யாராவது பொடிநடையாகப் போய், அவ்விடத்தில் பிரதி எடுத்து, இவ்விடத்தில் ஏற்ற வேண்டிய கட்டாயம்.

'இது சரிப்படாது' என்று கம்ப்யூட்டர் ஆசாமிகள் கண் துஞ்சாமல் உழைத்து, ஒரே கட்டடத்தில் இருக்கப்பட்ட கம்ப்யூட்டர்களைக் கம்பிச் சுருள் மூலம் இணைக்க வழி செய்தார்கள்.

ஈதர்நெட் அட்டை (Ethernet card) என்ற சிறிய பலகை பொருத்தப்பட்டு இப்படி இணைந்த கம்ப்யூட்டர்கள், தகவல் கொடுத்து வாங்கிக் கட்டுண்ட பாசவலைதான் லோக்கல் ஏரியா நெட்ஒர்க் (Local Area Network) என்ற தனிப்பட்ட வலைப் பின்னல்.

அங்கங்கே இப்படி உருவான லோக்கல் வலைகள் இணைய, வட்டம், மாவட்டம், மாநிலம், தேசம் என்கிற மாதிரி அளவில் எல்லாம் அடுக்கடுக்கான வலை அமைப்புக்கள்... இவை தவிர, கல்லூரிகள், மருத்துவமனைகள் என்றெல்லாம் அந்தந்தத் துறை சார்ந்த வலைகள்...

வலைகளை எல்லாம் இணைக்கும் மகாவலைதான் இன்டர்நெட்.

**1960**களில், அமெரிக்கப் பாதுகாப்பு நிறுவனமான பென்டகன் முன்கை எடுத்து, நான்கு பல்கலைக் கழகங்களின் கம்ப்யூட்டர்களை இணைத்துத் தொடங்கி வைத்த ஆர்ப்பாநெட் (இன்டெர்நெட்டின் பூர்வாசிரமப் பெயர்), தற்போது உலகத்தில் எண்பதுக்கும் மேற்பட்ட நாடுகளில் இருக்கும் சின்னதும் பெரிதுமான கிட்டத்தட்ட முப்பது கோடி கம்ப்யூட்டர்களை இணைத்து, அசுர வேகத்தில் வளர்ந்து கொண்டு போகிறது.

இன்டெர்நெட்டில் சேர என்ன செய்ய வேண்டும்?

# கம்ப்யூட்டர் மூலம்



ஒரு பர்சனல் கம்ப்யூட்டர், கம்ப்யூட்டரைத் தொலைபேசியில் இணைக்க, 'மோடம்' என்ற கைக்கடக்கமான சாதனம்... இவை இருந்தால் போதும். இன்டர்நெட் சேவையாளர்கள் (Service providers) என்று நாட்டுக்கு நாடு கடை திறந்துள்ள நிறுவனங்கள் மூலம், இன்டெர்நெட் ஜோதியில் கலந்து விடலாம்.

கம்ப்யூசெர்வ், அமெரிக்கா ஆன்லைன், பிக்ஸ் என்றெல்லாம் ஏகப்பட்ட சேவையாளர்கள்... 'சாப்பிட்டுப் பார்த்து காசு கொடு சார்' என்று சாம்பிள் மாம்பழத்துண்டு நறுக்கித் தரும் எலக்ட்ரிக் டிரெயின் பழ வியாபாரி போல, 'ஒரு மாத இலவச சேவை தருகிறோம்... திருப்தி என்றால் அங்கத்தினராகச் சேருங்கள்' என்றபடிக்குக் கடை விரிக்க,

ஒவ்வொரு நிறுவனத்துக்கும் லட்சக்கணக்கில் சந்தாதாரர்கள்!

இன்டர்நெட்டில் என்னென்ன மாதிரி சேவை சாதிக்கப்படுகிறது?

சர்வதேச எலக்ட்ரானிக் அஞ்சல்...

வந்தவாசியில் இருக்கும் கம்ப்யூட்டர், வாஷிங்டனில் ஒரு கம்ப்யூட்டருக்குச் செய்தி அனுப்ப வேண்டும் என்றால் சிம்பிள்... கடிதம் அனுப்புவது போலத்தான்...

போய்ச் சேர வேண்டிய விலாசத்தை பெயர், கதவிலக்கம், தெரு, ஊர், நாடு என்று கடித உறையில் கிரமமாக எழுதுவது போல், போய்ச் சேர வேண்டிய கம்ப்யூட்டரின் இன்டர்நெட் விலாசத்தை (Internet Address) செய்தியோடு தர வேண்டும். தங்கள் மூலம் இன்டர்நெட்டில் இணையும் ஒவ்வொரு கம்ப்யூட்டருக்கும் சேவையாளர்கள் தருகிற விலாசம் இது.

கடிதம் போல, கண்டம் கடந்து, கடல் கடந்து

# ஷாப்பிங்!

பறந்து, ஆனால் சில மணி நேரங்களில் செய்தி போய்ச் சேர்ந்து விடும்.

ஒரே வித்தியாசம். கடிதம் முழுசாகப் போகும். இன்டர்நெட்டில் தகவல் சின்னப் பொட்டலங்களாக (packets) உடைபட்டு, வழியில் ஏகப்பட்ட கம்ப்யூட்டர்கள் வழியாகக் கடந்து, சேரிடத்தில் முழுசாகச் சேர்ந்து விடும்.

கம்ப்யூட்டர் மென்பொருள் (software) போன்ற தகவல் கோப்புக்களைப் பரிமாறிக் கொள்ளவும் இன்டெர்நெட் வழிசெய்கிறது.

முடுக்குச் சந்தில், ஒண்டுக் குடித்தனத்தில் இருப்பவர்கள், வீட்டுக் கல்யாணத்தைத் திருமண மண்டபத்தில் நடத்தி விட்டு, பொண்ணு மாப்பிள்ளையை வீட்டுக்குக் கூட்டி வருவது போல, சின்னக் கம்ப்யூட்டர் வைத்திருப்பவர்கள் அதில் செய்ய முடியாத பிரம்மாண்டமான கணக்கீட்டுப் பணிகளை, இன்டர்நெட் மூலம் வேறு பெரிய கம்ப்யூட்டரில் இணைப்பு ஏற்படுத்தி, அங்கேயே செய்து முடித்து, பலா பலன்களை மட்டும் இறக்குமதி செய்து கொள்ளலாம்.




இன்டர்நெட்டின் மற்றொரு சிறப்பு அம்சம் செய்திக் குழுக்கள். (News groups)

ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் ஆர்வம் உள்ளவர்கள் தொடர்பு கொண்டு விவாதிக்க ஏற்பட்ட வசதி இது.

நியூக்ளியர் பிசிக்ஸ் போன்ற கனமான விஷயங்களிலிருந்து, ஜாக்கிசான் ரசிகர் மன்றம் வரை, பற்பல விஷயங்கள் பற்றி அமைந்த இந்த குழுக்களில் யாரும் கலந்து கொள்ளலாம். சின்னச் சின்னதாக, சில எழுதப்படாத விதிமுறைகள்...

அந்தந்த செய்திக் குழுவுக்கு சம்பந்தமில்லா விஷயம் பற்றிப் பேசக் கூடாது. மியூசிக் அகாதமியில் இசை விற்பன்னர்கள் மேளகர்த்தா ராகங்கள் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கும் போது, தடாலடியாகப் புகுந்து 'முக்காபலா'வின் சிறப்பை விலாவரியாகப் பேச ஆரம்பிப்பது போலத்தான் இதுவும்.... அப்புறம், முழுக்க முழுக்கப் பெரிய எழுத்துக்களில் ('OH HEAR ME' என்பது போல) செய்தி அனுப்பக் கூடாது. கூச்சல் போடுகிற மாதிரி நாகரீகம் இல்லாத செயலாம் அது!

போன வருஷ ஆரம்பத்திலிருந்து, இன்டர்நெட்டுக்கு அபரிமிதமான வளர்ச்சி. ஒவ்வொரு நாளும் புதிதாக இருபதாயிரம் பேர் சேர்கிறார்கள். காரணம் கேட்டால் 'வெப்' என்கிறார்கள்.

இன்டர்நெட்டின் மற்ற வசதிகளை எல்லாம் பின்னுக்குத் தள்ளி விட்டு, ஒரே வருடத்தில் சூப்பர் ஸ்டாரானது 'வேர்ல்ட் வைட் வெப்' (World Wide Web) என்ற இந்த 'வெப்'. இதை உபயோகித்து, எந்த விஷயத்தைப் பற்றியும், உலகம் முழுவதிலிருந்தும் ஒட்டு மொத்தமாகத் தகவலைப் பெற முடியும். எந்த ஊரில், எந்தக் கம்ப்யூட்டரில் என்ன தகவல்...

அந்தக் கம்ப்யூட்டரின் முகவரி... எதுவுமே தெரியவேண்டியதில்லை.

வருகிற தகவல், ஒலி, ஒளி ரூபத்திலும் இருக் கலாம் என்பது 'வெப்'பின் பெரிய விசேஷம்.

உதாரணமாக, 'சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்கள்' பற்றித் தெரிந்து கொள்ள விரும் பினால், 'இந்தா பிடி' என்று இன்டர்நெட் நாடுவாரியாக, மாநிலவாரியாகப் படங் களோடும், சப்தஜாலங்களோடும் உங்கள் கம்ப் யூட்டர் திரையில் பரத்தும். உலகம் முழுவதும், எங்கெங்கோ இருக்கும் ஒன்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பெரிய கம்ப்யூட்டர்களில், ஹைப் பர்டெக்ஸ்ட் (Hypertext) என்ற தொழில்நுட் பத்தைப் பயன்படுத்திச் சேகரிக்கப்பட்டு, சாமர்த்தியமாக அட்டவணைப்படுத்தப்பட்ட தகவல் இதெல்லாம்.

கடலாக விரிந்து பரந்த விவரங்களிலிருந்து தேவையானதை மட்டும் தூண்டில் போட்டு எடுக்க, மொஸைக் (Mosaic), கோபர் (Gopher) போன்ற மென்பொருள்கள் பயன்படுத்தப்படு கின்றன.

'வெப்'பின் 'ஒளியும் ஒலியும்' சவுகரியத்தை அடிப்படையாக வைத்து, புதுசு புதுசான சங்கதிகளை அறிமுகப்படுத்திக் கொண்டிருக் கிறார்கள்.

இதில் முக்கியமானது 'இன்டர்நெட் தொலைபேசி.'

ஒரு விசேஷ இயர்ஃபோனும், இன்டெர் நெட்டில் இணைக்கப்பட்ட கம்ப்யூட்டரில் இதற்கான மென்பொருளும்தான் தேவை... கம்ப்யூட்டர் தாற்காலிகமாகத் தொலைபேசி யாக அவதாரம் எடுத்து விடும். மறுமுனையி லும் - அது அமிஞ்சிக்கரையோ, ஆப்பிரிக் காவோ - இதே போல அமைப்பு இருக்க வேண்டும்... அப்புறம் என்ன? மணிக்கணக்கில் பேசலாம். செலவு? இன்டெர்நெட் சேவையாள ருக்குச் செலுத்த வேண்டிய சொற்பமான மாதாந்திர சந்தாவில் இதுவும் அடக்கம்.

'நம்ம பொழைப்புலே மண்ணுதான்' என்று டெலிபோன் கம்பெனிக்காரர்கள் கவலைப் பட்டு, உடம்பு இளைத்துக் கொண்டிருப்பதாகக் கேள்வி.

தொலைபேசி போல, இன்டெர்நெட் ரேடியோ ஸ்டேஷன்களும் வந்து கொண்டிருக் கின்றன. நாள் முழுக்க இசை, பேச்சு என்று கம்ப்யூட்டர் மூலமாக ஒலிபரப்பி, கம்ப்யூட்டர் மூலமாகவே கேட்டு ரசிக்க வழிவகுக்கும். இவை இன்னும் பரவலாகும் போது, கம்ப் யூட்டரை 'ஆன்' செய்தவுடன், 'புலி மார்க் சீயக்காய்த்தூள்' விளம்பரம் கேட்டால் ஆச் சரியப்படுவதற்கில்லை.

'வெப்'பைப் பத்திரிகைகள் பெருவாரியாகப் பயன்படுத்த ஆரம்பித்து விட்டன. 'வால் ஸ்ட்ரீட் ஜர்னல்' போன்ற நூற்றுக்கணக்கான பத்திரிகைகள், இன்டெர்நெட் மூலம் தேவைப்பட்டவர்களுக்குச் செய்திகளைத் தரு கின்றன. நம்மூரிலிருந்தும் ஒரு பத்திரிகை - ஹிந்து 'வெப்'பில் தன் சர்வதேசப் பதிப்பை வெளியிடுகிறது.

உள்ளூர்ப் பதிப்பும் 'வெப்'பில் வரும் போது, நியூயார்க் வாழ் தமிழர்கள் தட்டுச் சுற்று வேட்டியும், கையில் காப்பித் தம்ள ருமாக, 'அண்ணாசாலையில் ஊர்வலம் போன தால் போக்குவரத்து நெரிசல்' போன்ற செய்தி களைச் சுடச்சுடப் படிக்கலாம்.

மற்ற பத்திரிகைகள் எப்படியோ... 'வெப்'பில் தகவல் சேவை அளிக்கும் ஒரு பத்தி ரிகை வாசகர்களின் அன்புத் தொல்லையைச் சமாளிக்க முடியாமல் திணறுகிறதாம்! தினசரி எட்டு லட்சம் வாசகர்கள் 'படம் வேணும்' என்று முட்டி மோதுகிற அந்தப் பத்திரிகை... காதைக் கொண்டாங்க சொல்றேன்... 'பிளே பாய்' சார்!

ஆயிரம் இருந்தும், வசதிகள் இருந்தும், இன்டெர்நெட் மூலம் அனுப்பப்படும் செய் திகள், அடைய வேண்டிய இடத்தைப் பத்திர மாக அடையும் என்ற உத்தரவாதம் இதுவரை இல்லாமல் இருந்தது.

எங்கேயோ புறப்பட்டு, எங்கேயோ போய்க் கொண்டிருக்கும் தகவலை, சம்பந்தமில்லாத ஆசாமி யாராவது வளைத்துப் பிடித்துப் படித்து விட்டுத் தன் சொந்தச் சரக்கையும் சேர்க்கவோ, முழுசாக மாற்றி அனுப்பவோ சாத்தியம் இருந்ததைப் பயன்படுத்தி, கொஞ்சம் போல கம்ப்யூட்டர் அறிவும், நிறையக் கிரிமி னல் மூளையுமாக விஷமிகள் அங்கங்கே தலை யெடுத்தார்கள். உடனே, 'ரோஜா' அரவிந்த்சாமி போன்ற கிரிப்டாலஜிஸ்டுகள், இன்டெர் நெட்டில் தகவல் பத்திரத்துக்குக் கைகொடுத் தார்கள்.

பொதுச் சாவி, தனிச்சாவி என்று வெவ் வேறு தகவல் சங்கேதங்கள் கொண்டு தகவலை உருவம் சிதைத்து, 'பூட்டி' பத்திரமாக அனுப் பவும், சேர வேண்டிய இடத்தில், 'திறந்து' பழை யபடி உருமாற்றிப் படிக்கவும் வழிசெய்யப் படுவதால், நடுவில் யாரும் கைவரிசை காட்ட முடியாது!

இந்த உத்தரவாதம் வந்ததும், 'வெப்' மூலம் பணம் கூடப் புரள ஆரம்பித்து விட்டது.

வாஷிங்மெஷின் வாங்க வேண்டும் என் றால், வீட்டில் கம்ப்யூட்டர் முன்னால் உட் கார்ந்து, 'வெப்'பில் வெளியான எல்லா வாஷிங் மெஷின் தயாரிப்பாளர்களின் விளம்பரங்களை யும் அலசி, படங்களைப் பார்த்து, ஒவ்வொரு தயாரிப்பின் விசேஷத்தையும் காதால் கேட்டு, நமக்கு வேண்டியதைத் தேர்ந்தெடுத்து ஆர்டர்

கொடுத்து, கூடவே கிரடிட் கார்ட் எண்ணையும் அறிவித்தால் போதும். அரைமணியில் சரக்கு வீட்டுக்கு வந்து சேர்ந்து விடும்.

இதே போல, 'இந்தியா வேர்ல்ட்' என்ற சேவையை, வெளிநாடுகளில் இருக்கப்பட்ட இந்தியர்கள் பயன் படுத்தி, இந்தியப் பொருட்களைக் கம்ப்யூட்டர் மூலம் பார்த்துத் தெரிவு செய்து ஆர்டர் கொடுத்தால், இந்தியாவில் இருக்கும் அவர்களின் இஷ்டமித்ர பந்துக்களை அவை உடனே சென்றடையும். நகை, துணி மணி, கடியாரம் போன்ற ஐட்டங்களுடன், லேட்டஸ்டாக இதில் சென்னை அடையாறு கிராண்ட் ஸ்வீட்ஸ் இனிப்புக்களும் அடக்கம்!

இந்த ஆகஸ்ட் பதினைந்தில் இன்டர் நெட் இணைப்பு கிடைத்த, இங்கே இருக்கப்பட்ட பாக்கிய சாலிகள் கொஞ்சம் போலத்தான் சந்தோஷப்படுகிறார்களாம்.

மத்திய அரசு நிறுவனமான வி.எஸ். என்.எல். என்ற இன்டர் நெட் லிமிடெட் (Videsh Sanchar Nigam Ltd)தான் நம் நாட்டில் ஒரே இன்டர்நெட் சேவையாளர். பம்பாயில் கேந்திர கம்ப்யூட்டரும், சென்னை, கல்கத்தா, தில்லி போன்ற பெருநகரங்களில் கிளை கம்ப்யூட்டர்களுமாக இவர்கள் வழங்கும் சேவையை, இந்த ஊர்களில் கம்ப்யூட்டர் வைத்திருப்பவர்கள்தாம் பெற முடியும்.

அதற்கும், 'ஒவ்வொரு சந்தாதாரரும் வருடத்துக்கு இருநூற்று ஐம்பது மணி நேரம்தான் இன்டர் நெட்டைப் பயன்படுத்த முடியும்' என்று ரேஷன் இருக்கிறது. சகட்டு மேனிக்கு 'வெப்'பை உபயோகித்தால், ஓரிரு மாதத்திலேயே கோட்டா தீர்ந்து போய் அப்புறம் கையைக் கட்டிக் கொண்டு இருக்க வேண்டியதுதான்!

'கொஞ்சம் பொறுங்கள்... இங்கேயும் சீக்கிரம் இஷ்டம் போல இன்டர்நெட் உபயோகிக்க வசதி செய்து கொடுத்து விடுவோம்' என்கிற வி.எஸ்.என்.எல்.காரர்கள், ஜி டீ.வி.யோடு உடன்பாடு செய்து கொண்டு, இன்டெர் நெட்டைப் பிரபலப்படுத்தும் முயற்சியில் இறங்கியுள்ளார்கள்.

**- இரா. முருகன்**

# வாரத்துக்கு இரண்டு லட்சம்!



✪ " 'நாயகனு'க்குப் பின் கமல் உங்கள் படத்தில் நடிக்கவில்லையே...?"

"கதைக்கு ஏற்றபடிதான் நான் நடிகரைத் தேர்ந்தெடுப்பேன்; நடிகருக்கு ஏற்ற கதையை அல்ல..."

-பிலிட்ஸ் இதழுக்கு இப்படி பதில் சொன்னவர் மணிரத்னம்.

✪ பம்பாயில் ஒரு மாடி பஸ் மோதி 25 வயது கங்காவுக்கு அடிபட்டது. பஸ் டிரைவர் கைதானார். ஒரு கிரேன் உதவியுடன் கங்காவை மருத்துவ மனைக்குக் கொண்டு போனார்கள். கங்கா ஒரு யானை.

✪ சென்னை சிந்தாதிரிப் பேட்டை மெரின் ரோட்டில் ஒரு எம்.ஜி.ஆர். சிலை உள்ளது. அந்தப் பொன்னிறச் சிலைக்கு நிஜ கறுப்புக் கண்ணாடி அணிவிக்கப்பட்டுள்ளது.

✪ ரேகா, டிம்பிள் இருவரும் முதன் முறையாக டீ.வி.க்கு வருகிறார்கள். மகேஷ் பட் எடுக்கப்போகும் 'நயன தாரா' என்ற டீ.வி. தொடரில் நடிக்க இருவருக்கும் பேசப்பட்டுள்ள வாரச் சம்பளம் - தலா இரண்டு லட்சம் ரூபாய்!



• ரேகா

✪ ஷேக்ஸ்பியர் பற்றி தாகூர் 'விஸ்வகவி' என்றொரு கவிதை எழுதியிருக்கிறார். அதன் ஒரிஜினல் கையெழுத்துப் பிரதியை, இங்கிலாந்தில் ஷேக்ஸ்பியர் பிறந்த வீட்டில் வைத்துள்ளார்கள். அந்த வீட்டுத் தோட்டத்தில் தாகூருக்கு சிலைகூட இருக்கிறது!

✪ தற்போது அமெரிக்காவில் வசிக்கும் டெல்லிக்காரரான தீபக் சோப்ரா ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். Ageless body; Timeless mind என்ற அப்புத்தகம் இதுவரை பத்துலட்சம் பிரதிகளுக்கு மேல் விற்றுவிட்டது. நியூயார்க்கின் நம்பர் ஒன் best seller!

✪ அயல்நாடுகளில் சக்கைப்போடு போடும் இந்தியர்கள் பற்றி பிரணாய் ராய் ஒரு தொடர் தயாரிக்கவிருக்கிறார். இதில் இடம்பெற ஒப்புக்கொண்ட ஒரு தமிழர் சமீபத்தில் காலமாகிவிட்டார். அவர்- விஞ்ஞானி சுப்ரமண்யம் சந்திரசேகர்.

**-கௌதம்**

# தினகரன் திட்டம் என்ன?

## நீங்கள் கேட்டவை

**- தராசு**

● எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

? கல்யாணக் காட்சியை இறைவனே பார்த்திருந்தால் கூட 'ஜெ'வை வணங்கியிருப்பான் என்று ஒரு கல்யாண மேடையில் பட்டா பிராமன் பேசியிருக்கிறாரே...?

! ஹிரண்யகசிபுவின் ஆட்சிதான் நினைவுக்கு வருகிறது!

● வி. எஸ். ராமு, செம்பட்டி.

? ராவுடன் ரஜினி சந்தித்துப் பேசியது பற்றி...?

! இன்றைய தேதியில் ரஜினிக்குத் தனிக் கட்சி தொடங்கும் திட்டமில்லை என்பதால் அச் சந்திப்பு காங்கிரஸுக்கு ஏகப்பட்ட மகிழ்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஆர்.எம்.வீ. அண்ட் கோவுக்கு வெறுப்பு; ஏமாற்றம் – தனிக்கொடி நாட்ட அவரைத் தானே நம்பியிருக்கிறார்கள்!

● எஸ். மதியழகன், நாகூர்.

? தினகரனின் திட்டம் என்ன?

! எப்போதும் ஒன்றுதான். எண்ணுவது. நேற்று வரை பணத்தை; இன்று கம்பிகளை; நாளை: கம்பிக்குப் பின் இருக்க வேண்டிய நாட்களை!

● கே. நாகராஜ், திருச்சி - 12.

? வானொலியில் ஒலிபரப்பாகும் கர்நாடக இசையை என்றாவது முழுமையாகக் கேட்டதுண்டா?

! பல நாட்கள் கேட்டு மகிழ்ந்ததுண்டு. சென்னை வானொலியில் இப்போது நிறைய நேரம் கர்நாடக இசைக்குத் தரப்படுகிறது. கச்சேரிகள் தவிர, பாடல் பயிற்சி, பாடல் நய விளக்கம் என்ற நல்ல, பயனுள்ள நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன. நிலைய இயக்குனர் திருவேங்கடத்தின் தனிக் கவனம் நிகழ்ச்சிகளில் முத்திரை பதித்துள்ளது.



• சந்திப்பு...



• ... பற்றி...?

● கா.கு. இலக்கியன், சென்னை - 92.

? ஈழத்தின் நிலப்பரப்பை வெல்லும் இலங்கை ராணுவம் அங்குள்ள மக்களின் மனப்பரப்பை வெல்ல முடியுமா...?

! மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி என்பது போல் போராளிகள் Vs இலங்கை அரசு போரில் மக்கள் வெறுப்படைந்து மனப்பரப்பு என்பதே வறண்டு போய் வாடுகிறார்கள். அச்சமும் வெறுப்பும் மட்டுமே தலைதூக்கியிருக்க, மனப் பரப்பாவது, மண்ணாங்கட்டியாவது!

● எம். ரத்தினவேல், பொன்மலை.

? காட்டிலாகா ஊழியர்கள் மூவரை வீரப்பன் கடத்திச் சென்றுள்ளானே?

! எத்தனை காலத்துக்குத்தான் வீரப்பன் விவகாரத்தை மாநில போலீஸ் கையாண்டு சொதப்புவது! வரட்டு கௌரவத்தை மூட்டை கட்டி வைத்து விட்டு, ராணுவத்தை வரவழைத்து வீரப்பன் வசிக்கும் இடத்தை முற்றுகையிட்டுப் பிடிப்பதுதான் புத்திசாலித்தனம்!

● பி.பாலாஜிகணேஷ், கோவிலாம்பூண்டி.

? தமிழக சட்டப் பேரவையில் ஜெயலலிதா இதுவரை 763 தடவை அதாவது 161 மணி நேரம் பேசியுள்ளாராமே?

! ஆமாமாம்; மற்றவர்களைப் பேசவிடாமல் வெளியேற்றி விட்டால் இத்தனை நேரமும் பேசலாம்; இதற்கு மேலும் பேசலாம்!

• ஏமாந்தவர்



● ஜி. அர்ஜுனா, திருப்பூர்.

? திருமணங்களுக்கு அதிகம் செலவு செய்யாதீர்கள். சிக்கனமாக நடத்துங்கள் என்று

நெடுஞ்செழியன் அறிவுரை கூறியிருக்கிறாரே?

! மக்களுக்கு உபதேசம் செய்ய மட்டும் அமைச்சருக்குத் தைரியம் வந்து விடுகிறது என்பதுதான் பெரிய தமாஷ்; அதைவிட பெரிய தமாஷ், உலக சிக்கன நாள் குறித்து முதல்வர் செய்தித்தாளில் கொடுத்திருக்கும் முழுப் பக்க விளம்பர அறிவுரை...!

● ச. பழனி, பட்டுக்கோட்டை.

? 'இனிமே ஜெயலலிதாவுக்கு வோட்டுப் போட மாட்டோம்; எம்.ஜி.யாரோட இரட்டை இலைக்குத்தான் போடுவோம்...' - இது சில பெண்மணிகள் சொன்னது. அப்புறம் தமிழகம் எப்படி உருப்படும்?



...ி முத்திரை



• விளம்பர அறிவுரை



• சரித்திர சோகம்



• இன்னமும் சலாம்

! இந்த ஒரு சிலரைப் போல் ஏராளமான அப்பாவிகள் இருக்கிறார்கள். எதிர்க்கட்சிகள்தான் திட்டமிட்ட, தெளிவான பிரசாரப் பாதை வகுத்துக் கொண்டு மக்களைத் தெளிவிக்க வேண்டும்.

● இரா. திலீப், திருச்சி - 14.

? கருமிகளால் கட்சி தொடங்க முடியாது என நெடுஞ்செழியன் கூறுகிறாரே?

! கட்சி தொடங்கப் பணம் தேவைதான்; ஆனால் பணம் மட்டுமே போதாது! அது ஒன்றையே நம்பி கட்சி நடத்துவோர் இப்படித்தான் பேசுவார்கள்.

● ச. ஜான்ரவி, கோவில்பட்டி.

? தற்போது இந்திய ரயில்வேயின் நிர்வாகம் எப்படி உள்ளது?

! முன்னாள் ரயில்வே அமைச்சருக்கு இன்னமும் சலாம் போட்டுக் கொண்டிருக்கிறது! இல்லாவிட்டால், ஜாஃபர் ஷரீஃப் தம் குடும்பத்துடன் நாகூர் சென்று வருவதற்கான ஸ்பெஷல் ஏ.சி. கோச்சுகளை வழக்கமான ரயிலில் இணைக்க ஒரு லட்ச ரூபாய் வரை செலவு செய்யுமா!

● நெல்லை வி. சிவா, மதுரை - 16. ❑

? வாழப்பாடி - சு. சுவாமி - இருவருள் 'ஜெ'க்கு எதிரான வில்லத்தனம் செய்வதில் யார் திறமையானவர்?

! இருவருமே வாய்ச் சொல் வீரர்கள். ஆனால் வழக்கறிஞர் சு. சுவாமிக்கு சட்டப் பாயின்டுகள் விரல் நுனியில் இருப்பதோடு மாறுவேடம் போடும் கலையும் கைவந்தது... நீங்களே மதிப்பெண் கொடுத்துப் பாருங்களேன்.

● ஏ. சுகுமார், காட்டுக்காஜூர்.

? பா.ஜ.க. வென்றால் வாஜ்பாயிதான் பிரதமராமே...?

! ம்ஹூம்... அதைத்தான் அத்வானி மறுத்து விட்டாரே! ஆனால், ஹிந்து தீவிரவாத கட்சியாக முத்திரை பெற்று விட்ட பி.ஜே.பி., சிறுபான்மையினர் வோட்டுக்களைப் பெற விரும்பினால், மிதவாதியான வாஜ்பாயியை முன்னிறுத்தி மட்டுமே பெற முடியும்.

● கி. மனோகரன், நெற்குப்பை.

? இஸ்ரேல் பிரதமர் சுட்டுக் கொல்லப்பட்டது பற்றி...?

! இஸ்ரேல் பிரதமர் ராபினின் படுகொலை காந்திஜியின் மரணத்தை நினைவூட்டியது. அமைதிக்காகப் போராடும் துணிவுடையவர்கள் தங்கள் சொந்த சகோதரர்களால் வெறுக்கப்படுவதும் இப்படி உயிரைத் தியாகம் செய்வதும் சரித்திரத்தில் மீண்டும் மீண்டும் இடம்பெறும் சோகம்.

● கே. அனிதா, கோவை.

? ஜெயலலிதாவின் சொத்துக்கள் யாருக்குப் போய்ச் சேரும்...?

**❑ ரூ. 25 பரிசு பெறுபவர் : நெல்லை வி. சிவா, விவி உணவகம், அரசரடி, மதுரை - 16.**

! எல்லாம் முறைப்படி நடந்தால், அமுலாக்கப் பிரிவினர் மூலம், அரசுக்கு...

● குமாரி, வேலூர்.

? இங்கிலாந்து அரசி கூட ஏமாந்து விட்டாரே?

! கனடா நாட்டுப் பிரதமர் போல் குரல் மாற்றிப் பேசிய ஒரு வானொலி நிகழ்ச்சி இணைப் புரையாளரிடம் அரசி பதினேழு நிமிடங்கள் தொலைபேசியில் உரையாடியிருக்கிறார். குரல் மாற்றிப் பேசி ஏமாற்றுவதில் மன்னரான அவரிடம் அரசி ஏமாந்தது பெரிதல்ல, அவரைச் சுற்றியுள்ள பாதுகாப்பு வளையமும் ஏமாந்ததுதான் விந்தை!

# வண்ணக் கனவுகள்

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்

அப்புவிற்கு எதிலும் சந்தோஷமே தென்பட்டது. இல்லாவிட்டால் அந்த ரிடையர்டு ஃபண்டாபீஸ் கிழம், 'தாழை, தழைகீரை என்று ஏதேதோ புல் வகைகளைப் பிடுங்கி வா' என்று ரயில்வே லைன் பக்கம் துரத்தி விடும் போது கும்புவான்.

பத்து நாளாய் இல்லை...

அவனுக்குத் தெரியாமல் ஏதேதோ வீட்டில் நடக்கின்றன. அதாவது அப்படி அம்மா நினைத்துக் கொண்டிருக்கிறாள். பூந்தோட்டம் பக்கத்தில் அவனுக்காகப் பெண் பார்த்திருக்கிறார்கள். அவனிடம் சொல்லவில்லை. கேட்டால் அழகு காட்டுகிறாள்... அவன் அசடாம்...

அப்பு தினமும் ஆற்றங்கரையையொட்டிய மடத்தில் உடம்பைத் தேற்றி வருகிறான். வெய்ட் லிப்டிங், தண்டால் என்று காலையின் பெரும் பகுதி போய் விடுகிறது. சுந்தர வாத்தியார் மேற்பார்வையிடுவார் தினமும். அவருக்கு நாற்பது ஐம்பது சிஷ்யர்கள். வாத்தியார் அப்புவிடம் காசு வாங்குவதில்லை. அதற்குப் பதிலாக கான்வெண்ட் தெருவில் மாதாந்தர நெல்லை அரைத்துத் தரவேண்டும். வாத்தியார் இன்னும் கொஞ்சம் நாளில் கழி சொல்லித் தரேன் என்கிறார். அதுவும் தெரிந்தால்... அம்மாடி... சிலிர்த்தது அப்புவிற்கு. தாய்க்குப் பின் தாரம் எம்ஜியார்தான். 'ஆகா நம் ஆசை நிறைவேறுமா...' பாடினான்...

பாடல் சட்டென்று நின்றது. நமக்குப் பார்த்த பெண் பானுமதி போல் இருக்குமா...பூந்தோட்டத்தில் மாட்டு வண்டி உண்டோ...

அம்மா தினமும் வைது கொண்டிருக்கிறாள். குடும்பத்துக்கு ஒவ்வாத கர்லாக் கட்டை சகவாசம் என்பது அவள் வைவதன் காரணச் சுருக்கம். செத்துப் போன கணவனின் துர்க்குணங்கள் இந்தக் கடன்காரனுக்கும் இருக்கிறதாம்... அப்பு அப்பாவை நினைத்துப் பரிதாபப் பட்டான். மேலே போனாலும் அம்மா விடமாட்டாள்.

ஆறு மணி வண்டி வருவதற்கான அடையாளங்கள். கைகாட்டியின் கம்பிகள் கல்லைப் புரட்டி விட்டு நகர்ந்தன.

தெற்கிருந்துதான் வருகிறது.

ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் அடிபம்பு இருக்கிறது. தழையைக் கழுவினால்தான் ஃபண்டாபீஸ் கிழம் சும்மாயிருக்கும். இல்லாவிட்டால் நேஸ்டி, ஸ்டுப்பிட் என்று தொடங்கி வாய் பூராவும் இங்கிலீஷ்தான். அர்த்தம் புரியாவிட்டாலும் குரலும் பாவமும் குலை நடுங்க வைக்கும்.

'அட போய்யா' என்று சொல்ல ஆசைதான். இன்று வரை தைரியம் வரவில்லை. யாருக்கு இளப்பம்... கல்யாணம் ஆகட்டும்...

ஒரு கையால் பம்பையும் மற்றொரு கையால் கீரையைக் குளிப்பாட்டுவதையும் சிரமமாகவே செய்ய வேண்டியிருந்தது. அவ்வாறு செய்கையில் தடதடவென்று ஆறுமணி வண்டி நுழைந்தது. ப்ளாட்ஃபாரத்திற்குள் மட்டும் வேகமாக ஓடுகிறதோ?

"லேய் திருவாழத்தான்..."

யாரையோ யாரோ அழைப்பதாகப் படவில்லை. இது சந்தேகத்துக்கிடமின்றி தன்னை அழைக்கத்தான்... யாரது?

வேங்கடம் தெரிந்தார்... அப்புவிற்குத் தூக்கி வாரிப் போட்டது. 'வேங்கடமோ சங்கடமோ' என்பார்கள் ஊரில். பார்க்காதது மாதிரி போய் விடலாம். மனிதன் எப்போதும் வம்புக்கு அலைபவன். எல்லார் வீட்டு சேதியும் அவருக்குத் தெரிந்தாக வேண்டும். எடுறா ஓட்டம்.

"லேய்... ஒன்னத்தான்டா... மாப்ள..." வேங்கடம் கையைத் தட்டினார்.

சூடமிட்டாளைக் கடித்த மாதிரி விறுவிறுப்பானது அப்புவிற்கு. என்னது மாப்ளயா...

கால்கள் நின்றது நின்றது தான்...

"திருட்டுப் படவாடா நீ... மோட்டா குடியில் பொண்ணு பாத்துட்டா பெரிய ஆளாடா நீ? எனக்குத் தெரிஞ்சு..." கெட்ட பாஷையில் உபமானம் வந்தது. வேங்கடத்திடம் இது ஒரு துன்பமான இன்பம்... அடுத்தவரைச் சொல்லும் போது ருசியாக இருக்கும்... தன்னைத் தாக்கும் போது தான் வல்லடியே...

"மோட்டா குடியா..." அப்புவுக்கு நிஜமான ஆச்சரியமே வந்தது... குபுக்கென்று உடம்பின் நாலு பக்கமும் ஏதோ பொத்துக் கொண்டு ஓடியது...

"மாமா... ஒங்களுக்குத் தெரியுமா?" என்றான் அப்பு கீரைக் கட்டை உதறியபடி.

வேங்கடம் மாமா இதற்குப் பதில் சொல்லவில்லை. அவர் கண்கள் அங்குமிங்குமாய் அலைந்தன. மீண்டும் இடமிருந்து வலம். வலமிருந்து இடம்.

"யாரு மாமா... யாரத் தேடறேன்?"- மாமா தேடும் நபர் வந்தால் பரவாயில்லை... அப்பு தவித்துப் போனான். பெண் மோட்டாகுடியாமே?

"ம்... இன்னிக்குன்னு ஒத்தனும் ஆப்பட மாட்டான். பண்டிகை, எழவுன்னு தலையச் சொறிஞ்சுண்டு நிக்கட்டுப் கழட்டிண்டு அடிக்கறேன் மாமா துப்பினார்.

"யாரு மாமா?"

"ஒண்ணுமில்லடா... பேரளத்துல ரொம்ப நாளா கூட்டாளி ஒத்தன் பைசா தராம பெப்பே காட்டிண்டிருந்தான். எப்ப கேட்டாலும் வேட்டிய ஒதறிக் காட்டி இருந்தா எடுத்துக்கோம்பான். அவனுக்கு மோட்டாகுடில நெலம். பய அறுப்பு வெச்சிருக்கான்னு காதுல விழுந்தது. நேர களத்துக்கே போய்ட்டேன்... என்னவோ சால்ஜாப்பு சொன்னான். நான் யாரு.. ரெண்டு மூட்டை உளுந்த அள்ளிண்டு வந்துட்டேன்..."

அப்பு எக்கிப் பார்த்தபோது வேங்கடத்தின் முதுகுக்குப் பின்னால் இரண்டு மூட்டைகள் தெரிந்தன... ஒன்றோடொன்று யுத்தம் செய்வது போல் சாய்ந்திருந்தன. கண் திட்டத்தில் எண்பது கிலோவுக்குப் பழுதிருக்காது.

"ஏன் மாமா... அங்கதான் சேதி சொன்னாளா?" மாமாவுக்கு மறந்து விடக் கூடாது என்று வேண்டிக் கொண்டே அப்பு எடுத்துக் கொடுத்தான்.

"என்ன சேதி? நீ ஸ்டேஷனுக்கு வருவேன்னா?"

"அதில்ல மாமா... எனக்குப் பொண்ணு" அப்புவால் முழுமையாகச் சொல்ல முடியவில்லை.

"அட... வெக்கமா.. இதுக்கே வெக்கப்பட்டா முதலிரவுக்கெல்லாம்"...

வேங்கடம் மாமா தன் குணத்தைக் காட்டி விட்டார். அப்புவுக்கு அவர் பேசுவது முழுமையாகப் புரியாவிட்டாலும் அவரது பேச்சு சுத்தமானதாயில்லை என்பது வெளிச்சமானது.

"போங்கோ மாமா... ஒங்களுக்கு எப்பவும் பரிவாசம்தான். யாரை மாமா பாத்தேள்?"

"எனக்கு இதான் வேலை.. போடா போ... நானே மூட்டையக் கொண்டு போகணும். சந்தி



பண்ணணும்னு தவிப்பா தவிக்கறேன்... வந்துட்டான்..."

"நான் எடுத்துக்கறேன் மாமா!" என்றான் அப்பு தன்னை மறந்து... மூட்டைகளை விட மோட்டாகுடிப்பெண் பற்றிய வராத தகவல் கனமாக அழுத்தியது...

"நீயா... நீயே அறியாப் பையன்... ஒனக்கு என்ன தெரியும்? மூட்டையை எசகுபிசகா தூக்கினா கழுத்து பொரண்டுடும். கல்யாணம் வேற பண்ணணும்."

"ப்பூ... வாத்தியார் வீட்டு மூட்டைக்கு இது எந்த மூலை? இந்தக் கிரையப் புடிங்கோ... அது மட்டும் போறும்... ரெண்டே நடை..." அப்பு வேட்டியை இறுக்கிக் கொண்டு உள்ளங் கையை மண்ணில் பதித்தான்... இனி வழுக்காது...

"எஸ்.எம்கிட்ட சொல்லிடறேன்.... அப்புறமா இன்னொரு மூட்டைய எடுத்துண்டு டலாம்... ரைட்.... கௌம்புடா மாப்ள."

மூட்டை எதிர்பார்த்த அளவு எளிதாய் இல்லை. மூச்சு முட்டியது. வேங்கடம் பூசாரியைப் போல வழியெங்கும் கிரையை விசிறிக் கொண்டே வந்தார்.

வேங்கடம் மாமா நடுவிலிருந்து ஆரம்பித்தார்.

"பையன் எப்படின்னு பொண்ணோட மாமாக்காரன் கேட்டான்... அசட்டுப் பையன்னு சொல்ல முடியுமா... கெட்டிக் காரன்னு சொல்லிட்டேன். கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளு..."

சாதாரண சமயத்தில் அப்பு இவ்வாறு மட்டம் தட்டும் எவரையும் ஒரு தட்டு தட்டி விடுவான்... அம்மாவும் இப்படித்தான் செய்கிறாள்...

"ஏம் மாமா... பொண்ணு..." அப்புவின் கேள்வியை அற்ப ஆயுளுக்குத் தள்ளுவது போல் எதிரில் வந்தவரைப் பிடித்துக் கொண்டார் வேங்கடம்...

"என்னய்யா சடகோபன்... நேத்து ராத்திரி தொள்ளாயிரத்து நாலுல கைக்காசு பூராவும் போச்சாமே.. இன்னிக்குக் காலைல டாக் ஆஃப்த டவுனே இதான்...."

"அதெல்லாம் ஒண்ணுமில்ல... விட்டதைப் புடிச்சுடுவேன்" என்றார் சடகோபனாகப் பட்டவர் சற்றே ரோஷத்துடன்...

"கிழிச்சீர்... விட்டதைப் பிடிக்கணும்னா அதுக்குப் பொட்டிப் பணம் வேணுய்யா..." வேங்கடத்தின் சிரிப்புக்கு முன் தாள முடியாமல் சடகோபன் அகல, அப்புவுக்கும் நடக்க ஏதுவானது.

"ஏம் மாமா... பொண்ணு..."

"பொண்ணா... காவேரி ஜலம்டா.. பளிச்சுன்னு பழுக்கா சம்புடம் மாதிரி இருப்பா.. இங்க இருக்கற மாதிரி இலுப்பச் சட்டின்னு நெனச்சியா..."

"நல்ல கலரா மாமா..."

'சாரசம் வசீகர கண்கள் சீர்தரும் முகம் சந்த்ர பிம்பம்.'

அப்புவை வெறுப்பேற்றுவதைப் போல மாமா சம்பந்தம் இல்லாமல் அவர் நாளைய சினிமா பாடலைப் பாடினார். தெருவில் அனைவரும் வேடிக்கை பார்த்தனர்.

அய்யய்யோ... அம்மா பார்த்து விட்டாள். அம்மாவிற்கு வேங்கடம் மாமா எதிரி இல்லை. ஆனாலும் மாமாவின் மனைவி மாமாவுக்குத் தெரியாமல் அம்மாவுடன் செய்த சில வியாபாரங்களில் மன வருத்தம். போக்கு வரத்து ரத்து.

அம்மாவுக்கு அவனை மொத்தவென்றே புழக்கத்திலிருக்கும் வெண்கல உருளியின் நினைவு வந்தது அப்புவிற்கு...

"சரி... இன்னொரு மூட்டையையும் போட்டுட்டுப் போ... நான் அதுக்குள்ள ஒரு ரவுண்டு அடிச்சுட்டு வந்துடறேன்."

அப்பு தயங்கி நின்றான்.

'போய்ட்டு வாடா... விலாவாரியாப் பேசலாம்." அப்புவை லட்சியம் செய்யாமல் வேங்கடம் கிளம்பினார்.

இரண்டாம் மூட்டைக்கு முதல் மூட்டை இலகு... பழுக்கா சம்புடம் மாதிரி இருப்பாளாமே... அம்மா இந்த ஒன்றிலாவது நல்லது செய்திருக்கிறாள்.

அப்பு நெடுநேரம் காத்திருந்த பின் வேங்கடம் வந்தார். அவனைக் கவனியாதவர் போல் திண்ணையில் அமர்ந்தார்.

"மாமா..."

"அடடே....திருவாழத்தான்... வாடா!"

"வந்து"- ஒரு நிமிடம் தயங்கிய அப்பு வருவது வரட்டும் என்ற நோக்கத்துடன் கிடுகிடுவென்று பேசினான்.

"அந்த மோட்டாகுடி பொண்ணைப் பார்த்தது பத்தி விவரம் சொல்லுங்கோ..."

"எந்த மோட்டாகுடி... ஓ... அதுவா... நான் பொண்ணையும் பாக்கலே, கிண்ணையும் பாக்கலே.. யாரோ ஒருத்தன் வழில நிறுத்திப் பேசிண்டிருந்தான். நான் இன்ன ஊர்னதும் உன்ன விசாரிச்சான். தட்ஸ் ஆல்..."

"அப்ப நீங்க பொண்ண...?" அப்புவுக்கு அழுகை வந்தது.

"எங்கடா போயிடப் போறா? இன்னிய பாஞ்சாம் நான் என் கூட்டாளி மல்லாக் கொட்டை அறுக்கறான். ரெண்டு மூட்டை எப்படியும் பீச்சிடுவேன்.. இதே ஆறு மணி வண்டிக்கு வா... ஜமாய்ச்சுடுவோம்..."

மாமா எழுந்து உள்ளே போனார்.

அப்புவுக்குத் தோள் வலித்தது.

## 'சுருக் நறுக்' போட்டி — 3 முடிவுகள்

# நேசம் என்பது...

**கீழ்க்கண்ட சொல்லோ — வியங்கள் ரூ. 50/- பரிசு பெறுகின்றன :**

● மாங்காயை நினைக்கும் போது வாயில் உணரும் புளிப்புச் சுவை போல, நண்பரை நினைக்கையில் நெஞ்சில் ஊறுவது.

— வி. அரவிந்த், சென்னை - 18.

● பூக்கள் மலர்வது போல, இயற்கையாக மற்றவர் மேல் ஏற்படும் பாசம்.

— கோதை ராஜேந்திரன், சென்னை — 15.

● வேஷம் போடாத பாசத்தின் முதிர்ந்த நிலை.

— வி. இ. உத்தமராஜ், செல்வபுரம்.

● மானுட உணர்வின் மேன்மையான அடையாளம். பரவசத்தின் நாற்றங்கால்.



ளர்ச்சியூட்டும் கோடை மழை. துயருக்கு ஒத்தடமிடும் உளவியல் மருந்து.

— எஸ். பி. செல்வம், திண்டுக்கல்.

● உள்ளத்தில் இருந்தால் பாசவலை. உதட்டில் இருந்தால் மோசவலை.

— ஜி. ராதாகிருஷ்ணன், தாராபுரம்.

● அறிவினால் புரிந்து கொள்ள முடியாத, இதயத்தின் நயனமொழி.

— ஆர். ராஜாராம், சென்னை — 28.

● இன்றைய அரசியல்வாதிகளுக்கு மக்களிடம் இல்லாத ஒன்று.

— ஆர்.பி. திருஞானம், கொரட்டி (அஞ்சல்).

● வாழ்க்கையின் வானவில்.

— வி. பிச்சுமணி, பம்பாய் - 98.

● பாசத்தின் பரிணாம வளர்ச்சி; இதயங்களின் ஈர்ப்பு விசை.

— வெ. ஆசைத்தம்பி, தஞ்சாவூர் — 1.

● அகத்தில் ஜொலிக்கும் அலாவுதீனின் அற்புத விளக்கு.

— எல். சண்முகசுந்தரி, இராமநாதபுரம்.

# அவன் புகழ் பாட அவன் அருள் வேண்டும்!

## சுகி சிவம்

நம்மில் ஓர் அக்னி இருக்கிறது. அதன் முதலோ முடிவோ தெரியாது. அதை நினைக்க நினைக்க - உணர உணர - முக்தி கிடைக்கும். இதைத்தான் 'திருவண்ணா மலையை நினைக்க முக்தி' என்று எழுதினார்கள். திரு வண்ணாமலை அக்னி தலம். அந்த மூலாக்னியை நினைக்க (சிந்திக்க) முக்தி நிச்சயம் என்பதே முன்னோர் முடிவு! அதனால்தான் திருவண்ணாமலையில் தீபம் ஏற்றி - மலை யின் உச்சியில் எரியவிட்டு மூலக்கனலை சிரஸில் ஏற்றி எரியவிடும்படி யோசனை சொன்னார்கள்.

முதலும் முடிவும் இல்லாத, ஆதியும் அந்தமும் இல்லாத, அடிமுடி காணப்படாத அரும்பெருஞ்ஜோதியே திரு வண்ணாமலை ஜோதி! அதனை நினைத்தால் முக்தி நிச்ச யம்.... ஆம்! முதலும் முடிவும் அறியப்படாத நம்மில் விளங் கும் அக்னியை நினைக்க - உணர - முக்தி நிச்சயம் - இப் படிச் சிந்திக்கலாமே!

சிவபெருமான் அடியும் முடியும் காண முயன்று பிரமனும் திரு மாலும் தோற்றனர் என்கிறது இத் தல புராணம். "மாலும் நான்முகனும் காணாமலை" என்று திருவாச கம் அண்ணாமலை ஆண்டவரை அறிவித்துள்ளது.

'மால்' என்றால் தமிழில் மயக்கம் என்று பொருள். அறியாமையாகிய, மாயையில் மயங்கியவர் இறைவனைக் காண முடியாது... அதுமட்டுமல்ல... ஒருமுகப்பட்டு உள்ளம் குவிந்தால்தான் இறைவனை உணர முடியும். அதனால் தான் நான்முகனால் முடியவில்லை. ஒருமுகப்பட்டவன் ஒருமுகன்... நாலாபக்கம் கவனம் சிதறினால் நான்முகன்.... இவர்கள் காணாமலை... இறைவன்!

மேலும் திருமால் மகாலக்ஷ்மியின் (செல்வத்தின்) தலைவன். நான்முகன் சரஸ்வதியின் (கல்வியின்) தலைவன். நமது செல்வத்தாலோ, கல்வியறிவாலோ இறைவனை நெருங்க முடியாது! எனவே, "மாலறியா நான்முகனும் காணா மலை" என்றார் மாணிக்கவாசகர். அண்ணா - நெருங்கா மலை என்று பொருளாயிற்று. இதில் ஓர் ஆச்சர் யம்... நெருங்க முடியாத நெருப்பு மலையான அண்ணா மலையைப் பற்றி, "ஞானத் தபோதனரை வா என்று அழைக்கும் அண்ணாமலை" என்று வசனம் உண்டு. அது நம்மால் நெருங்க முடியாதது! ஆனால் கருணையால் வா என்று அழைப்பது. 'அருட்பெருஞ்ஜோதி... தனிப்பெருங் கருணை' என்ற வள்ளலார் கண்ட வாசகத்தின் விளக்கம் இது!

'ருணம்' என்கிற வடசொல் லுக்குக் காயம் - புண் - என்று பொருள். அதன் எதிர்மறை அ + ருணம். வினைப் பயனால் எடுத்த காயத்தை (ருணம்) - அதா வது உடம்பை - இனி இல்லாமல் ஆக்கும் முக்தி தரும் மலை அண்ணாமலை. எனவே இது அ - ருணா - சலம். அதனால் தான் திருஞானசம்பந்தர், "திரு அண்ணாமலை தொழுவார் வினை வழுவாவணம் அறுமே" என்று உறுதி கூறினார். திருவா ரூர் பிறக்க முக்தி, காசியில் இறக்க முக்தி; அண்ணாமலை நினைக்க முக்தி என்பது வச னம். திருவாரூரில் பிறப் பதும், காசியில் இறப்பதும் வசதிப்படாவிட்டாலும் அண்ணாமலையை நினைப்பது முடியுமே!

உடல் நோய்களை யும் - உடலே நோய் என்பதால் பிறவியையும் ஒருங்கே அழிப்பது அண்ணா மலையார் அருள் என்பதை "இரக்கமாய் என் உடல் உறு நோய்களைத் துரக்களை" என்று திருக்குறுந்தொகையில் அப்பர் அறிவித்தார். அப்பர் வழியில் பகவான் ரமணர், குகை நமச் சிவாயர், குருநமச்சிவாயர், சேஷாத்ரி சுவாமிகள்... இன்று யோகிராம் சூரத்குமார் என்று பட்டியல் நீண்டு கொண்டே போகும்...

'ருணம்' என்றால் சிவப்பு நெருப்பு என்றும் பொருள். நெருப்புமலை... பாவத் தூசுகளை எரிப்பதில் என்ன ஆச்சரியம்! கார்த்திகை மாதக் கிருத்திகை யில் பெரிய கொப்பரையில் எண்ணெய் விட்டு நீளமான திரி யிட்டு மலை உச்சியில் ஏற்றும் தீபம் இதன் அடையாளமே. "தீபதரிசனம் பாபவிமோசனம்"

என்பது பொன்மொழி.

அண்ணாமலையார், அருணாசலேஸ்வரர் என்பவை இறைவர் திருப்பெயர். அம்பிகையோ உண்ணாமுலையாள் எனப் பொருள்பெறும் அபீதகுஜலாம்பாள். முருகன் கூட அம்மை மார்பில் வாய்வைத்துப் பால் உண்டதில்லையாம். அவரது திருமார்புகள் பரஞானம், அபர ஞானம் என்பதால் எவராலும் எச்சில்படுத்தப்படாதவை. ஞானசம்பந்தருக்குப் பொற்கிண்ணத்தில் கறந்து ஞானப்பால் ஊட்டினாள் என்றுதான் சேக்கிழார் பாடுகிறார்.

இங்குள்ள மூர்த்தங்களில் பெரிய திருமேனியுடன் காட்சி தருபவர் முக்குறுணி விநாயகர். தல விருட்சம் மகிழ மரம். சிவகங்கை, பிரம்மதீர்த்தம், அக்னி தீர்த்தம், இந்திர தீர்த்தம் போன்ற தீர்த்தங்கள் தவிர மலைப்பகுதி முழுதுமாக முந்நூற்று அறுபது தீர்த்தங்கள் உள்ளன என்பர். கார்த்திகை விழா தவிர, பங்குனி உத்திரத்தில் திருக்கல்யாணமும், சித்திரை பிரம்மோற்சவமும் இங்கு நடைபெறுகிறது. கிரி பிரதட்சிணம் என்று மலையை வலம் வருவது இங்குள்ள சிறப்பு வழிபாடு. மலையே பெருங்கடவுள்.

மாணிக்கவாசகர் திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி இங்கு பாடினார் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. மேலும் நக்கீரர், பரணதேவர், கபிலதேவர், பட்டினத்தடிகள் ஆகியோர் திருவண்ணாமலை பற்றிப் பாடியவை பதினோராம் திருமுறையில் அடங்கும். பிற்காலத்தில் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய சோணாசல மாலை, சைவ எல்லப்ப நாவலர் பாடிய திருவருணைக் கலம்பகம், ஸ்ரீரமணர் பாடிய அருணாசல அட்சர மாலை தவிரவும் பல புலவர்களால் பாடப்பெற்ற தலம் அண்ணாமலை!

அண்ணாமலைக்கு ஆயிரம் ஆயிரம் சிறப்பிருந்தாலும் அங்கு நடைபெறும் அருணகிரிநாதர் விழா தனிச் சிறப்புடையது. ஆகஸ்டு 15-இல் நடைபெறும் அருணகிரிநாதர் விழாவில் பல்லாயிரம் மக்கள் கூடுவதும், சமய இலக்கிய விரிவுரை கேட்பதும், இரவில் பல புகழ் பெற்ற நாதஸ்வர, தவில் மேதைகள் ஒன்று சேர்ந்து சுவாமி புறப்பாட்டின்போது இசை யஞ்சலி செய்வதும் வாழ்வில் ஒருமுறையாவது காண வேண்டிய ஒன்று!

உலகியலில் உழன்று பின் ஞானம் பெற்றதாகத் தன்னைக் கூறிக் கொள்ளும் சற்குரு அருணகிரிநாதர் உலகை வெறுத்து கோபுரத்தில் இருந்து தற்கொலை செய்து கொள்ளக் குதித்த இடம் திருவண்ணாமலை. சம்பந்தாண்





''நமது ஏரியாவிலேயே விதம்விதமா மாமூல் வசூலிக்கும் நமது ஏட்டையாவுக்குப் 'புரட்சி மாமூலர்' என்ற பட்டத்தைச் சூட்டி, இந்த மலர் மாலையை அணிவிக்கிறோம்.

- பி.எஸ்.பி.

• • • • •



"என் மகளுக்கு நீங்க சொன்ன வரன் வீட்டு பேக் கிரவுண்டைப் பற்றிச் சொல்லுங்க...!"

"அவங்க வீட்டு பேக் கிரவுண்டில் கிணறு, துணி துவைக்கிற கல், துளசி மாடம், சில பூச்செடிகள், பல முள் செடிகள் இவையெல்லாம் இருக்கு!"

• • • • •

''சனிப் பெயர்ச்சி பலன், குரு பெயர்ச்சி பலன் இருக்கு. எது வேணும்?''

''மாப்பிள்ளை பெயர்ச்சி பலன் இருந்தா கொடுப்பா...!''



டான் என்பவனை வெல்லும் பொருட்டு பிரபுடதேவ மகாராஜா முன்பு "மயிலுமாடி நீயாடி வர வேண்டும்" என்று வேண்ட, திருக் கோயில் தூணில் இருந்து முருகன் வெளிப் போந்த இடம் கம்பத்து இளையனார் கோயி லாக இங்கு உள்ளது.

பழநி, திருச்செந்தூருக்கு அடுத்தபடி யாக அருணகிரிநாதரின் திருப்புகழ் அதிகம் பாடப்பெற்ற பெருமை அண்ணாமலைக்கே உண்டு. முருகன் குரு வடிவம் கொண்டு திரு வடி சூட்டி மௌன உபதேசம் செய்து தம்மை ஆட்கொண்ட இடம் இது என்பதால், அருண கிரிநாதர் விரும்பிய தலம் இது.

உலகத்தில், அலுவலக வேலை பார்ப்ப வர்கள் காசுக் கணக்குப் பார்த்துக் குறிப் பிட்ட நேரம் மட்டுமே வேலை பார்ப்பார் கள். தொழிலில் நாட்டம் உடையவர்கள் நேரம் காலம் பார்க்காமல் வேலை பார்ப்பார் கள். அந்த மாதிரி ஆன்ம ஈடேற்றத்தில் அக்கறை உள்ளவர்கள் இரவு பகல் பாராது, அவன் புகழ் பாட வேண்டும். அதற்கு அவன் கருணை வேண்டும். அந்தக் கருணை பொழி வானா என்ற ஐயமே வேண்டாம். ஏன் என் றால் அதுதான் அவன் வேலையே! அதற் காகவே சிவபெருமான் அவனை (முருகனை) வழங்கி இருக்கிறார்' என்ற பொருளில்,

*இரவுபகல் பலகாலும் இயல்இசை*
*முத்தமிழ்கூறித்*
*திறம்அதனைத் தெளிவாகத்*
*திருவருளைத் தருவாயே*
*பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத்*
*துவஞான*
*அரன்அருள்சத் புதல்வோனே*
*அருணகிரிப் பெருமானே!*

என்று பாடினார்.

இந்தப் பாடலில் 'அருணகிரிப் பெரு மானே' என்ற வரி முருகனையே குறிக்கும் - என்றாலும் அருணகிரிநாதருக்கும் பொருந் தும். முருகனும் அருணகிரி(மலை)ப் பெரு மான். திருப்புகழ் பாடிய நாதரும் அருணகிரிப் பெருமான்தான். காந்தத்துடன் சேர்ந்த இரும்பு காந்தமாகிறது. கந்தனுடன் சேர்ந்த அருணகிரி நாதரும் கந்தனாகிவிட்டவர்தான். 'நீயும் நானு மாய் ஏகபோகமாய்' என்ற திருப்புகழ் பாடி, அநுபூதி அனுபவத்தின்படி இருவருமே அருண கிரிப் பெருமான்! திருப்புகழ் இரவும் பகலும் பாட அருணகிரிநாதர் அருளும் தேவை தானே! இந்தத் திருப்புகழ் கந்தனைப் பாடும் இறைவணக்கம். அருணகிரி பக்தர்கட்கு அவ ரையே பாடும் குருவணக்கம்!

# ஒத்திகை

**பா. ராகவன்**

தொலைபேசி கூப்பிட்டது. தமிழரசன் எழுந்து போய் எடுத்து, வெற்றிலையைத் துப்ப மாட்டாமல், "யாழ்மூா அழூ?" என்றார்.

அது அந்தரங்கத் தொலைபேசி. நெருங்கியவர்களுக்கு மட்டுமே தெரிந்த எண். வேறு தொலைபேசி எனில் முதலில் 'தமிழ் வாழ்க' என்றுதான் தொடங்கியிருப்பார். அமைச்சரான பிற்பாடு பழகிக் கொண்ட சங்கதி.

"ஐயா, கன்னியப்பன் பேசறனுங்க. ஒரு முக்ய சமாசாரம். ஐயா தயாராயிருக்கணும். வீட்டுல சோதனை போட வாராங்கன்றது அநேகமா உறுதி ஆயிடுச்சிங்க."

"குறிப்பா சொல்லுய்யா. அமலாக்க ஆளுங்களா, சிபிஐயா இல்லை..."

"சிபிஐ தானுங்க. விடிஞ்சதும் வந்துருவாங்கய்யா."

"வந்துட்டுப் போவட்டும். நீ வச்சிரு."

தமிழரசன், மனைவியைக் கூப்பிட்டார்.

"பரமேசுவரி! காலைல பால் கொஞ்சம் கூடுதலா தேவைப்படும். சொல்லி வெச்சிரு!"

"விருந்தாளிங்க யாரும்?"

"சிபிஐன்னா புரியுமா? காக்கி போடாத போலீஸ்காரங்க."

"ஐயோ!"

"என்ன ஐயோ? புருசன் செயிலுக்குப் போயிருவான்னு பயப்படறியா? பைத்தியம்! நாப்பது வருசத்து அரசியல்வாதிடீ நான்! நான் பாக்காத போலீசா! நான் பாக்காத ரெயிடா! நான் பாக்காத.. சரிவிடு."



"பயமா இருக்குங்க. தினசரி, பத்திரிகைகள்ல வர்ற செய்திகளைப் பார்த்தே பயந்தேன்... சம்பாதிச்சது போதாதா? விட்ருங்களேன்னு தலை தலையா அடிச்சிக்கிட்டேன்... கோர்ட்டு, கேஸுன்னு போனா மானம், மரியாதை.."

விசும்ப ஆரம்பித்தாள்.

"பொது வாழ்க்கைல இதெல்லாம் சகஜம்டி. தவிர கொள்ளை அடிக்கறது கௌரவப் பிரச்னை ஆயிட்டுது இப்ப. நேத்து வந்தவனெல்லாம் இருவது கோடி, முப்பது கோடிங்கறான். என் சர்வீஸுக்கு, இந்நேரத்துக்கு அந்தமான் தீவுகள்ல ஒண்ணு விலைக்குக் கிடைக்குமான்னு கேட்டிருக்கணும்... ப்ச்!"

"எப்படியோ போங்க. என்னவும் பண்ணுங்க. நான் திருப்பதிக்கு வேண்டிக்கறேன். உங்களைக் கூட்டி வந்து மொட்டை போடறதா."

"தலைக்கு வந்தது தலை முடியோட போயிருச்சின்னாவா? அப்படித்தானே?"

அட்டகாசமாகச் சிரித்தார். படுக்கப் போனார்.

நாற்பது வருடங்கள். எத்தனை கட்சி மாற்றம்! எத்தனை ஊர்வலம்! எத்தனை செருப்படி! கொஞ்ச நஞ்ச சம்பாத்தியமா!

'சி.பி.ஐ. ரொம்ப தாமதம்' என்று நினைத்துக் கொண்டார்.

'அந்த திருப்பதி ரூட் லாரி பர்மிட் சமாசாரத்திலேயே சிக்கியிருக்க வேண்டியது.'

இப்போது கேஸ், அது இது என்று கொஞ்சநாள் செய்திகளில் இருக்கலாம். பதவி போகும்? அது பரவாயில்லை. தேர்தல் வருகிறது. அரசியல் ஃபார்முலா மாறிவிடும். அப்புறம் பழைய படி...

அதெல்லாம் அடுத்தக் கட்டம். முதலில் நாளைய சமாசாரம். சி.பி.ஐகாரர்கள் நிச்சயம் கைது செய்வார்கள். கைதானதும் நெஞ்சுவலி... அதெப்படி... மார்பைப் பிடித்துக் கொண்டு... தடாலென்று விழுவதா.. மெல்லச் சரிந்து.. கால் தடுமாறி.. வியர்த்துக் கொட்ட வேண்டும்... அதற்கு ஏதாவது செய்து விட வேண்டும்... ஏதாவது இன்ஜெக்ஷன்...

இட்டம் ஒர்க் அவுட் ஆகி விட்டால் தலைப்புச் செய்திகளில் தமிழரசன்.. யாராவது செய்தி கேட்டு தீக்குளித்தால் ரொம்ப விசேஷம்.. கன்னியப்பனிடம் ஏற்பாடு செய்யச் சொல்ல.. சே, என்ன இது!

எஸியில் போய் வியர்க்கிறது! ரொம்ப வேகமாக யோசிக்கிறேன். அதான் படபடப்பாக... தலை சுற்றுவது போல்..

நாக்கு ஏன் வரள்கிறது? ஒரு- ஒரு கிளாஸ் தண்... பரமேசுவரி... பர.. பரமே.. நெஞ்.. வலிக்...

# SUN கிரெடிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

வழங்கும்....

## 25%

தங்க நாணயம் + பரிசு கூப்பன்

(ஒவ்வொரு ரூ. 5000-க்கும்)

தங்க அறுவடைத் திரு விழா



**முதலீட்டாளர்கள் அனைவருக்கும் பரிசு உண்டு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதல் பரிசு... | 25பவுன் நகை | 1 நபர் | ஆறாவது பரிசு... | 2 பவுன் நகை | 10 நபர் |
| இரண்டாவது பரிசு... | 20பவுன் நகை | 1 நபர் | ஏழாவது பரிசு... | 1 பவுன் நகை | 15 நபர் |
| மூன்றாவது பரிசு... | 15பவுன் நகை | 2 நபர் | எட்டாவது பரிசு... | 4 கிராம் நகை | 30 நபர் |
| நான்காவது பரிசு... | 10பவுன் நகை | 2 நபர் | ஒன்பதாவது பரிசு... | 3 கிராம் நகை | 20 நபர் |
| ஐந்தாவது பரிசு... | 5 பவுன் நகை | 5 நபர் | பத்தாவது பரிசு... | 2 கிராம் நகை | 15 நபர் |

**சன்** கிரெடிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

40A, ஜுப்ளி சாலை,
மேற்கு மாம்பலம்,
சென்னை - 600 033.

✆ : 420 524

குறுகிய கால முதலீடுகளும் ஏற்கப்படும்

குலுக்கல் நாள்
16.01.96




• ஆயி மண்டபம் (பாண்டிச்சேரி)

மூன்றாவது கண் - 15

# ஒரு நபர் ஒரு நம்பர்!

சி.வி. நரசிம்மன்

**பா**ண்டிச்சேரி, பிரெஞ்ச் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த சமயம். பிரான்ஸ் நாட்டுடன் கடல் வாணிபம் கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்தது.

பாண்டிச்சேரியைப் பூர்வீகமாகக் கொண்டவர்களும், தமிழ்நாடு இதர மாநிலங்களைச் சேர்ந்தவர்களும் கூட அக்காலகட்டத்தில் பாண்டிச்சேரி வழியாக நடந்த வாணிபத்தில் செழித்து இருந்தனர்.

1954-55-ம் வருடங்களில், பாண்டிச்சேரி இந்திய அரசுடன் இணைந்த போது, இந்திய வாணிபக் கொள்கையில் சிற்சில சலுகைகள் - அந்தப் பகுதிக்கு மட்டும் (ஏற்கெனவே நடந்து வந்த ஏற்றுமதி - இறக்குமதி அளவை மனதில் கொண்டு) தரலாம் என்ற முடிவுக்கு வந்தார்கள். இதன் தொடர்பாக, முன்பு பிரான்ஸ் தேசத்துடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்த பல வியாபாரிகள் (சென்னை - பாண்டிச்சேரியைச் சேர்ந்தவர்கள்) புதிய லைஸென்ஸுக்கு விண்ணப்பித்தார்கள்.

அப்போது சென்னையிலிருந்து கொண்டு பாண்டிச்சேரியின் ஏற்றுமதி - இறக்குமதி விஷயங்களைக் கவனித்து வந்த ஓர் உயர் அதிகாரி - இணை முதன்மைக் கட்டுப்பாட்டு அலுவலர் (Jt. Chief controller), புதிய லைசென்ஸுக்கு விண்ணப்பித்த நபர்களிடையே குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் லைசென்ஸ் வழங்குவதில் போதுமான காரணங்கள் இன்றி நிறைய சலுகைகள் காட்டி விட்டார், பெரிய அளவில் லஞ்சம் புகுந்து விளையாடியிருக்கிறது என்று குற்றச்சாட்டு எழுந்தது. கேஸ், சி.பி.ஐ.யிடம் வந்தது.

'யார் யாருக்கு லைசென்ஸில் சலுகை தரப்பட்டது' என்கிற விவரம் ஏதும் இல்லாமல், பொதுவாக 'ஊழல்' என்று மட்டுமே சொல்லப்பட்டிருந்தது!

நான், சில புலனாய்வு அதிகாரிகளை இந்தப் புகாரை விசாரிக்கச் சொல்லி விட்டுக் காத்து இருந்தேன்.

ஒன்றிரண்டு அல்ல; நிறையவே ஊழல் நடந்திருக்கிறது! அந்த ஆபீசர் (சென்னையைச் சேர்ந்தவர்) எப்போதாவது பாண்டிச்சேரி சென்றால் ராஜமரியாதை நடக்கும் அவருக்கு. இங்கிருந்து பாண்டிச்சேரிக்கு ஏ.ஸி. செய்யப் பட்ட டாக்ஸியில்தான் போய் வருவார்' - இப்படியெல்லாம் பலமாகப் பேச்சு அடி பட்டது.

விசாரணையில் பரபரப்பான திருப்பங்களை எதிர்பார்த்த எனக்கு, என் புலனாய்வு அதிகாரிகள் வந்து சொன்ன, தந்த ரிப்போர்ட் முற்றிலும் மாறுபட்டதாகவே இருந்தது.

'அத்தனை ஃபைல்களைப் பார்த்து, தீர விசாரித்த பின்பும், நடந்ததாகச் சொல்லப்படும் ஊழலை நிரூபிக்க மெட்டீரியல் எவிடென்ஸ் ஏதும் இல்லை' என்று கூறி விட்டார்கள்!

"அது சரி. சம்பந்தப்பட்ட அதிகாரியை விசாரித்தீர்களா? அவர் மீது இப்படி ஒரு ஊழல் புகார் வந்திருப்பதாவது அவருக்குத் தெரியுமா?" என்று நான் கேட்டேன்.

"ஊழல் செய்ததற்கு ஆதாரம் ஏதும் இல்லாத நிலையில் அவரை விசாரிப்பதென்பது..." என்று இழுத்த என் ஜூனியர் ஆபீசர்களுக்கு விளக்கினேன் :

**அ**து சி.பி.ஐ. இயக்குனர் கோலி (Kohli) வகுத்தளித்த நெறிகளில் ஒன்று. ஒருவர் மேல் குற்றம் சாட்டப்படுகிறதென்றால், விசாரணையின் போது குற்றம் சாட்டப்பட்ட நபரின் கருத்தையும் கேட்டு அறிந்து கொள்ள வேண்டியது முக்கியம். ஒருதலைபட்சமாக நாம் முடிவுக்கு வரக் கூடாது.

'உங்களிடம் கூற எனக்கு ஒன்றுமில்லை; கோர்ட்டில் பார்த்துக் கொள்கிறேன்' என்று அவர் பேச மறுத்து விடவும் கூடும். அது பற்றிக் கவலையில்லை. அவர் மீது என்ன குற்றச்சாட்டு வந்துள்ளது என்று அவர் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். அது பற்றி அவர் என்ன சொல்ல விரும்புகிறார் என்று கேட்க வேண்டியது சி.பி.ஐ.யின் கடமை. பதில் சொல்வதும் சொல்ல மறுப்பதும் அவர் இஷ்டம்.

கோலி, பலமுறை இதை வலியுறுத்தியிருக்கிறார்.

ஆகவே, சம்பந்தப்பட்ட அதிகாரியையும் விசாரணைப் பட்டியலில் சேர்க்க வேண்டும் என்று என் டி.எஸ்.பி.யிடம் தெரிவித்தேன்.

அவர் இந்த கேஸ் விசாரணை நடந்து கொண்டிருந்த சமயம் சென்னையிலோ, பாண்டிச்சேரியிலோ இல்லை. வழக்கமான பணி மாறுதலில் தில்லிக்குச் சென்றிருந்தார்.

ஆகவே அவருக்கு சி.பி.ஐ. தரப்பிலிருந்து சம்மன் அனுப்பப்பட்டது. உடனே நேரில் வந்து அவர் தரப்பை விளக்கும்படி கேட்டுக் கொண்டேன்.

**வ**ந்தார்.

அவர் அப்போது வகித்திருந்த உயர்ந்த பதவியைக் கருதி, ஒரு இன்ஸ்பெக்டரோ டி.எஸ்.பி.யோ அவரை விசாரிப்பதைக் காட்டிலும் நானே நேரில் விசாரிக்கலாம் என்று நினைத்து, அவரை என் அறைக்கு அழைத்தேன்.

மரியாதையாக உட்காரச் சொல்லி, அவர் மீது குற்றம்சாட்டி வந்திருந்த பெட்டிஷனைக் காட்டி, "இதுபோல் உங்கள் மேல் குற்றச் சாட்டு வந்திருக்கிறது. உங்கள் பதில் என்ன?" என்றேன்.

அவர் உடனே மறுத்தார். டிபார்ட்மென்ட்டில் அவரைப் பிடிக்காத சிலரின் சதி என்றார். வழக்கமாக எல்லோரும் சொல்கிற பதில்தான் அது. அவர் அதோடு நிறுத்திக் கொண்டிருக்கலாம். விதி யாரை விட்டது?

"நான் பாண்டிச்சேரி போனதெல்லாம் என் சொந்தச் செலவில்தான். குறிப்பிட்ட தேதியில் சென்ற டாக்ஸி நம்பர், பணம் செலுத்தியதற்கான ரசீது, அங்கே தங்கி இருந்த ஹோட்டல் செலவுக்கான பில்கள் எல்லாம் என்னிடம் உள்ளன. வேண்டுமானால் காட்டத் தயார்!" என்றார்.

அவரே விரும்பிக் கேட்கும் போது நாம் ஏன் மறுக்க வேண்டும்? "சரி, கொண்டு வாருங்கள்" என்றேன்.

அவர் எல்லாவற்றுக்கும் தயாராகவே வந்திருந்தார் போலும்.

**ம**றுநாள் ஒரு கற்றை பில்களைக் கொண்டு வந்து கொடுத்தார். அவரை அனுப்பி விட்டு, நான் அவற்றை வெறுமனே புரட்டிக் கொண்டிருந்தேன். சிறப்பாக எந்தத் துப்பும் அதில் கிடைக்கவில்லை. வெறும் பில்கள்!

இருப்பினும் அவர் மெனக்கெட்டு வந்து கொடுத்துப் போனாரே என்பதற்காக அவர் தந்திருந்த டாக்ஸி பில் ஒன்றை எடுத்துக் கொண்டு போய், அதில் குறிப்பிட்டிருந்த



"வாழைக்காய் பஜ்ஜியிலேருந்து வாழைக்காய், உருளைக்கிழங்கு பஜ்ஜியிலிருந்து உ. கிழங்கு, வெங்காய பஜ்ஜியிலிருந்து வெங்காயத்தை மட்டும் பிரித்துத் திருப்பித் தந்தால் விலையில் 50% தள்ளுபடி...."

டாக்ஸி நம்பரின் உதவியால் அதன் டிரைவரைக் கண்டுபிடித்து விசாரித்து வரச் சொல்லி அனுப்பினேன்.

அது திருவல்லிக்கேணியைச் சேர்ந்த டாக்ஸி. டிரைவரிடம் குறிப்பிட்ட தேதி, ஆள் விவரம் சொன்னதும், "கரெக்ட் சார்! நான் தான் கூட்டிட்டுப் போனேன். பாண்டிச்சேரிக் குத்தான் போயிருக்கேன்! சரிதான்!" என்று ட்ரிப் ஷீட்டைப் பார்த்துச் சொன்னான்.

விசாரிக்கச் சென்றிருந்த டி.எஸ்.பி., அந்த டிரிப் ஷீட்டை வாங்கிப் பார்க்கவும், அதன் மேல் பகுதியில் ஒரு டெலிபோன் நம்பர் எழுதப்பட்டிருந்தது!

"இதென்ன நம்பர்?"

"இந்த நம்பர்லேருந்துதான் சார் போன் பண்ணி, அந்த ஆளை பாண்டிச்சேரிக்குக் கூட்டிட்டுப் போகச் சொன்னாங்க..."

அத்தோடு நிறுத்தியிருந்தால் விஷயம் முடிந்திருக்கும்.

"பேமென்ட்டு கூட அவங்கதான் சார் செட்டில் பண்ணாங்க!"

இதற்கு மேல் வேறென்ன வேண்டும்?

அந்தக் கம்பெனியை ட்ரேஸ் செய்து நெருங்கினோம்.

அது திருவல்லிக்கேணியிலுள்ள ஒரு ஏற்றுமதி – இறக்குமதி நிறுவனம். சொல்லப் போனால் எங்களுக்கு வந்த புகாரில் குறிப்பிட்ட இந்த கம்பெனி பற்றியோ - இவர்களுக்கு அந்த அதிகாரி 'சலுகை' காட்டிய விவரமோ இல்லை!

இருப்பினும் சிக்கிய தடயத்தை விட்டு விடாமல் அங்கே புகுந்து கிளற ஆரம்பித்தோம். கணக்கு – வழக்குகளில் ஏகப்பட்ட ஒழுங்கீனம். அளவுக்கு மீறி சலுகைகள் தரப்பட்டிருப்பது தெரியவந்தது.

ஒரு வழி அகப்பட்டால் தொடர்ந்து அத்தனை வழிகளும் திறக்கப்பட்டு விடும் என்பது புலனாய்வில் ஒரு சிறப்பம்சம். அதன்படி, அங்கே விசாரிக்க ஆரம்பித்தவுடன் மடமட வென ஊழலில் சம்பந்தப்பட்ட அத்தனை நிறுவனங்களும் இனம் காணப்பட்டு விட்டன!

அசைக்க முடியாத ஆதாரங்களுடன் ரிப்போர்ட்டை டில்லிக்கு அனுப்பினேன். மேலிடம் அதை ஏற்றுக் கொண்டு வழக்கை அரசிடம் தெரிவிக்க, அந்த அதிகாரி உடனடியாக சஸ்பெண்ட் செய்யப்பட்டார். அவர் மீது டிபார்ட்மென்ட்டல் என்கொயரி நடத்த உத்தரவிடப்பட்டது.

அந்த விசாரணை சென்னையில்தான் நடந்தது. விசாரணைக்காக வந்திருந்த அந்த அதிகாரி திடீரென ஒருநாள் என் அலுவலகத்துக்கு வந்தார். என்னைப் பார்க்க விரும்புவதாகத் தெரிவித்து விட்டு வெளியே காத்திருந்தார்.



"ஏன்யா கேவலம் ஒரு பலூனை உடைச்சதுக்காக பையனைப் போட்டு இந்த அடி அடிக்கிறே? நீ சின்ன வயசிலே பலூனை உடைச்சதே இல்லையா?"

"பலூன் அப்ப விலை என்ன, இப்ப விலை என்ன? அதையெல்லாம் யோசிக்க வேணாமா?"

— பெ. கலாசாமி

எனக்குக் குழப்பமாக இருந்தது. 'எதற்காக அவர் என்னைப் பார்க்க வேண்டும்?' இருப்பினும் வரச் சொன்னேன். உள்ளே நுழைந்தவர் பேசிய முதல் வார்த்தை : "தேங்க்யூ மிஸ்டர் நரசிம்மன்."

எதற்கு நன்றி? புரியவில்லை. அவர் மேலும் தொடர்ந்தார் :

"உங்கள் விசாரணையை மிகத் துல்லியமாக செய்திருந்தீர்கள். மிக நேர்மையாக நடந்து கொண்டிருக்கிறீர்கள். நடந்தவற்றிற்கான ஆதாரங்களை, சாட்சியங்களைக் கூட்டவும் இல்லை, குறைக்கவும் இல்லை. ஆனால் ஒரு விஷயம். நானாக அந்த ரசீதுகளைக் கொண்டு வந்து தந்திராவிட்டால் இந்த கேஸ் எப்போதோ மூடப்பட்டிருக்கும்! உங்களை நான் குறை கூற வில்லை. இப்பொழுது என் விதிக்குப் பணிந்து போகிறேன்!"

அவர் போய் விட்டார்.

பின்னால் அவர் பதவி இறக்கம் செய்யப்பட்டார். அரசில், செகரட்ரி கிரேடில் இருந்திருக்க வேண்டியவர், அண்டர் செகரட்ரியாகவே இருந்து ரிடையரானார்.

அன்று கோலி சொல்லித் தந்த அந்தப் பாடம் – குற்றம்சாட்டப்பட்டவரையும் ஒரு வார்த்தை 'அவர் தரப்பு பற்றிக் கேட்டு விட வேண்டும் என்பது - எத்தனை அவசியமானது என்பதை எனக்குத் துல்லியமாக உணர்த்தியது இந்த கேஸ்!

இன்னொரு கேஸ். இது மாதிரி அல்ல அது! ஒரு அதிபுத்திசாலியான ஏமாற்றுப் பேர் வழி, இந்திய தபால் துறையையே சிண்டைப் பிய்த்துக் கொள்ள வைத்த அந்தச் சம்பவம்...

(அடுத்த வாரம்)




செயல்திறன் மிக்க சான்மேக் குரூப்பின், ஓர் முக்கிய அங்கமாகிய சான்மேக் சிட்ஸ் லிமிடெட் வெற்றிகரமான மற்றுமொரு திட்டத்தை வழங்குகிறது.

**ரவுண்ட் -தி- இயர் சீட்டு குரூப்புகள்**

இப்போது நீங்கள் எந்த மதிப்புள்ள சீட்டு குரூப்பிலும் ஆண்டின் எந்தக் காலத்திலும் சேரலாம். தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம் மற்றும் கர்நாடகத்தில் உள்ள 21 கிளை அலுவலகங்களில் எதில் வேண்டுமானாலும் சேரலாம். இந்த வகையில் வாடிக்கையாளர்களின் வசதிக்குப் பொருந்தும் வகையில், அவர்களுடைய

# எந்த நேரமும் சான்மேக் நேரமே!




தேவைகளை நிறைவேற்றி, மிக நெருங்கி அவர்களுடைய உள்ளத்தையே தொட்டு விடுகிறோம். வாடிக்கையாளர்களின் தேவைகளை நிறைவேற்றுவதையே முக்கியக் கொள்கையாகக் கொண்டு, கடந்த ஆண்டில் சான்மேக் சிட்ஸ் மகத்தான சாதனை படைத்திருக்கிறது. இதுவரை வழங்கப்பட்ட பரிசுப் பணம் ரூ.36 கோடி இலக்கைத் தொட்டுவிட்டது. சந்தாதாரர்களின் எண்ணிக்கை மேலும் பெருகி, 12,000 க்கும் மேல் ஆகி விட்டது. பரவலாக அமைந்துள்ள அலுவலகங்களின் எண்ணிக்கை 21 ஆக உயர்ந்து விட்டது.

# விலா நோகச் சிரித்தேன்!

வட்டமேஜை

ரஜினியின் 'முத்து' திரைப்படத்திற்கு நடுநிலை தவறாது விமரிசனம் எழுதிய உமது விமர்சகரின் தைரியத்தை எத்தனை முறை வேண்டுமானாலும் பாராட்டலாம்.

தஞ்சாவூர் – 5, வனிதா ரவி.

காதல் அனைத்தையும் வெல்லும் திறன் படைத்தது என்பதை உணர்த்தும் விதத்தில் அமைந்தது ஜென்டானி தம்பதியினரின் வாழ்க்கை. அவர்களது இறுக்கமான காதலில் திருப்தி என்றாலும், முடியப் போகும் அவர்களது உருக்கமான வாழ்வை எண்ணி மனம் குமுறுகிறது!

ஏத்தாப்பூர், ரஜினிசாமி.

"பனி வேடந்தாங்கல்" படக் காட்சிகள் குளுமை! குளுமை! குளுமை!

வேலூர் - 4, மலை அரசன்.

சம்மட்டி அடிக்கின்ற இடத்தில் பறவைகளின் சரணாலயமா? இயந்திர சத்தம் கேட்கின்ற இடத்தில் இனிய பறவைகளின் சங்கீத ஒலியா? படிக்கவே மிக ஆச்சர்யமாக இருக்கிறது சார்!

லால்குடி, எம். இராஜேந்திரன்.

காட்டுமிராண்டித்தனமாக மக்களைக் கொன்று குவித்து விட்டு, தனி நாடு கோரிக்கையில் வெற்றி அடையலாம் எனப் புலிகள் எப்படி நம்புகிறார்கள் என்றுதான் புரியவில்லை. புலிகள், சந்திரிகாவின் நல்ல உள்ளத்தை உதாசீனப்படுத்தியதில் அவர்களுக்குத்தான் நஷ்டம். அதைத்தான் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

மொரட்டுப்பாளையம், க. நா. இராஜேஸ்வரன்.

## ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

யாழ்ப்பாணம் பற்றி எரியும் போது தமிழகத்தில் புலிகளின் ஊடுருவல் நிச்சயம் இருக்கும். 'மெத்தப் படித்த' நம்மூர் அரசியல்வாதிகள் நிச்சயம் அடைக்கலம் தருவார்கள். மீண்டும் பழைய குருடி கதவைத் திறந்த கதைதான் நடக்கப் போகிறது. ஆனால் இவை அனைத்தையும் கட்டுப்படுத்தும் முழு அதிகாரத்தை மத்திய அரசு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற தங்களின் எதிர்பார்ப்பு நியாயமானபோதிலும் எந்த அளவுக்கு சாத்தியம் என்பதுதான் யோசிக்க வேண்டிய விஷயம்.

பார்ம்பன்குளம், முத்துவேணி அரசு.

'நாற்காலி சுகம்' தேடும் மனிதர்களுக்கு மத்தியில், நாற்காலிகள் செய்யும் தொழில் மூலம், ஆதரவற்ற பெண்களுக்கு சேவை உள்ளத்துடன் ஒரு நல்ல வாழ்வை அமைத்துக் கொடுக்க விரும்பும் மைக்கேல் அவர்களின் புகைப்படத்தை வெளியிடாமல் விட்டு விட்டீர்களே!

சென்னை – 78, சி. பூங்கோதை குப்புஸ்வாமி.

சிதம்பரம் கின்னஸ் திருமணப் பந்தலில் கல்யாணத்துக்கு முன்பே பல மணப்பெண்கள் மெட்டி அணிந்திருந்ததாக சின்னப் பொடி வைத்து எழுதியிருக்கிறீர்கள். ஏற்கெனவே திருமணமான ஜோடிகளும் வந்திருந்தால், அதற்கு அம்மாவின் திருக்கரங்களால் ஆசீர்வதிக்கப்பட்ட மாங்கல்யங்களை மீண்டும் அணிந்து கொள்ள வேண்டும் என்ற பக்தி உணர்வுதான் காரணமாக இருந்திருக்கும்!

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

'அரசியல்வாதியின் ஒவ்வொரு அசைவுமே ஆதாயம் கருதித்தான் இருக்கும் என்பதையும் ஊரை அடித்து உலையில் போடுவதில் வட்டாரக் குட்டித் தலைவர்கள் பதினாறு அடி பாயும் வல்லமை உடையவர்கள் என்பதையும் "விலை" சிறுகதை அழகாக விளக்கியது.

தஞ்சாவூர் – 7, வளர்மதி ஆசைத்தம்பி.

'திருஷ்டிப் பொட்டு' கார்ட்டூனைப் பார்த்து விட்டு, விலா நோகச் சிரித்தேனுங்க!

சென்னை – 83, ஆர். ராஜேஷ்குமார்.

சிகரத்தின் உச்சியிலே தனித்து நிற்கும் ஒனிடா கேஷய். தன்னிகரற்ற டிவியின் அனைத்து சிறப்பம்சங்களுடன் காத்திருக்கிறது.

சரி நிகர் போட்டிக்காக ... கடுமையான சவாலுக்காக. சவால் எனில் எப்படிப்பட்ட பிராண்டுகளிடமிருந்து ... ஒனிடா கேஷய்யின் மகா சக்தி வாய்ந்த மாஸ்டர் கமாண்ட் கண்ட்ரோல் ...

உலகின் முதன் முதலான கராவ்கே தேர்வுடன் கூடிய 53 செமீ டிவியின் வெல்ல முடியாத தரம்...

அல்லது வீட்டிலேயே அரங்க ஒலியின் அனுபவத்தைத் தரும் இதன் ஜி-ஹார்ன் ஒலி. இவற்றைக் கண்டு மிரளாத பிராண்டுகளிடமிருந்து. உலகிலே முன்னேற்றம் கண்ட சில நாடுகளில் இப்போது இதே போன்ற பிராண்டுகள் மெதுவே தலை தூக்கி இருக்கலாம்.

ஆனால் அவற்றோடும் போட்டியிடத் துடியாய் துடிக்கிறது ஒனிடா கேஷய். வெற்றி வாகை சூடப் போவது ஒனிடாதான் ... மற்றவரை காக்கப்போவது கடவுள்தான்.




இந்தியாவிற்குப் பெருமை ...
உலகிற்குப் பொறாமை.

இது தெள்ளத் தெளிவு.
ஒரு இந்திய பிராண்ட் காத்திருக்கிறது
சர்வதேச போட்டிக்காக

திறப்பு விழா சலுகை நீடிக்கிறது..

புதிய கிளை திறப்பு விழா தொடர்கிறது..

# திருமகள்

## மைலாப்பூரில்

நவம்பர் 5 முதல்

165, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-4.
(ஆஞ்சநேயர் கோயில் எதிரில்) போன் : 499 75 40

**25% + 5%**
வட்டி ஊக்கத்தொகை

காண தவறாதீர்கள் RAJ TVயில்
ஒவ்வொரு ஞாயிறும் மதியம் 1 மணிக்கு
Y.G. மகேந்திரனின்
கிண்டலோ கிண்டல் நகைச்சுவை நாடகம்
வழங்குபவர்கள் திருமகள்

SPRINGHEAD



## THIRUMAGAL LEASING

HEAD OFFICE : 9, Ramanathan Street, T.Nagar, Madras - 17. Ph : 434 74 08 ◆ CENTRAL OFFICE : 89/12, Perambur Barracks Road, Doveton, Madras-7. Ph : 532 54 55 ◆ BRANCHES : PARRYS - 160, Thambu Chetty Street, Madras-1. Ph : 534 23 35 ◆ CHROMEPET - S.R.S. Complex, New No.52, G.S.T. Road, Madras-44. (Opp. C.M. Marriage Hall) Ph : 40 11 26 ◆ THIRUVARUR - 194, V.V.P. V.V.P. Building Anna Salai, Thiruvarur. Ph : 22 906

திருமகள்.. உங்கள் வீட்டுப் பொன் மகள்.

WORKING HOURS : 10 A.M. TO 6.30 P.M. SUNDAYS : 10 A.M. TO 1 P.M.




# தெய்வம் துணை

கடைசியாக திருமலையைக் காளத்தி கல்யாணத்தில் பார்த்தது. அஞ்சாறு வருஷமிருக்கும். அந்தச் சந்திப்பு கூட அவ்வளவாக ஞாபகம் இல்லை. எடுத்த எடுப்பிலேயே, "உன்னோட படம் ஒண்ணை எங்க ஊரு டூரிங்ல பார்த்தேன். என்ன டைரக்ட் பண்றே நீ? ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் வில்லன் ஒருத்தனைத் துரத்தித் துரத்தி தன் துப்பாக்கியிலிருந்த ஆறு ரவையும் தீர சுடறாரு. ஒண்ணுகூட அவனை விழுத்தல. ட்ரெயினிங் பீரியட்ல அந்த இன்ஸ்பெக்டர் எந்தக் காட்டிலயாவது விறகு வெட்டிக்கிட்டிருந்தாரா என்ன?'' என்றதும் எனக்கு லஜ்ஜையாய்ப் போய்விட்டது. அதுக்கப்புறம் அவருகிட்ட பேச்சு கொடுக்கவே தயக்கமாயிட்டுது.

எதிலும் யதார்த்தத்தை எதிர்பார்க்கிற அப்பழுக்கில்லாத கிராமவாசி அவர். என் வியாபார நோக்கத்தை விளக்கிச் சொல்லப் போய், அவர் நினைப்பையும் எண்ணத்தையும் கொச்சைப்படுத்திவிடுவேனோன்னு அப்போதைக்கு கம்முன்னு இருந்துட்டேன். அப்படிப்பட்டவரை இன்னைக்கு என் அக்கறைக்காகவும் அவசியத்தை முன்னிட்டும் தேடிப் போகிற நிர்ப்பந்தமேற்பட்டுப் போச்சு.

கிட்டத்தட்ட 400 கெஜம் நடந்திருப்பேன். பிரம்மாண்டமான வேப்ப மரமும், அதன் கீழிருந்த கோவிலும்... ராத்திரி பொழுதானதனால் திருமலையின் வீட்டை அனுமானிப்பதில் சிரமம் இருந்தது. பக்கத்திலேயே ஊர் கூட்டம் போல் கொஞ்சம் பேர் கூடியிருந்தனர். அவர்களில் ஒருவரை அணுகி அவர் பெயரைச் சொல்லி விசாரித்தேன். உடனேயே வீட்டைக் காட்ட என்னோடு ஒரு பெரியவர் எழுந்து வந்தார்.

வாசலில் என்னையும் குழந்தையையும் பார்த்ததும், "நினைக்கவே இல்லே. வருஷம் எத்தனை ஆச்சு... வா... வா... உள்ளே வா..." என்று மிகவும் அனுசரணையோடு அழைத்துப் போய் கைகால் அலம்பிக் கொள்ள சொம்பில் நீர் கொடுத்து, அத்தனை ராத்திரிக்கு மேல் தோட்டத்துக்குப் போய் துனி வாழை இலை பறித்து உப்புமா கிளறிப் போட்டு, குழந்தை பவித்ராவுக்குப் பாலைக் காய்ச்சிக் கொடுத்து, மொட்டைத் தளத்தில் தண்ணீர் தெளித்து, கட்டிலைப் பிரித்துப் போட்டுப் படுக்கை விரிப்பை விரித்து, அவரும் அவர் வீட்டிலும் முகம் சுளிக்காமல் செய்த உபசாரம் எனக்குள் பெரிய இடத்தை அவர்களுக்கு ஒதுக்கும்படி செய்தது.

திருமலை வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே கேட்டார். "வண்டி மக்கர்

சி. எம். நாராயணன்

ஆகலைன்னா எங்களையெல்லாம் இந்த ஜென்மத்திலே நினைச்சுப் பார்த்திருக்க மாட்டே...?"

"சொல்லப் போனா உண்மையே அது தான். ஏதோ ஒரு நல்லது கெட்டதுன்னாதான் நாம ஒருத்தரை ஒருத்தர் ஃபார்மாலிடிக்கு நினைச்சுப் பார்க்கிறோம். மத்தபடிக்கு இந்த கம்ப்யூட்டர் யுகத்திலே காணும்போதுதானே காட்சி?"

"ரொம்ப கரெக்டா சொன்னே. போகட்டும். இருந்தாற்போலிருந்து கும்பகோணத்துக்கு என்ன அவசரம்?"

"வேறொண்ணுமில்லே. இதோ இருக்காளே இந்த பவித்ரா, என் பேத்தி... லீவுக்கு மெட்ராஸிலே இருக்கேன்னு சொல்லவே இவள் அம்மாவும் அப்பாவும் எங்கிட்டே விட்டுட்டு ஊருக்குப் போயிட்டா. ஒரு வாரம் வரைக்கும் ஒண்ணும் பிராப்ளம் இல்லே. எண்ணி எட்டாம் நாள் ஹோம் சிக் வந்துட்டாப்ல 'எங்கம்மாகிட்ட போகணும். அப்பாவைப் பார்க்கணும்'னு அடம்பிடிக்க ஆரம்பிச்சுட்டா. யாரோட அனுப்பி வைக்கிறதுன்னு புரியாம, கடைசியில் நானே கூட்டிக்கிட்டு கிளம்பிட்டேன். வழியில பிரேக் டவுன்."

"அலுத்துக்காதே. நடந்த வரைக்கும் நல்லதுக்குன்னு நினைச்சுக்க."

"அதுகிடக்கட்டும். தொடக்கத்திலேயே கேட்கணும்னு இருந்தேன். முன்னைக்கு இப்போ நீ கூட சுரத்தா இல்லையே. என்ன தகவல்?"

திருமலை பதில் சொல்லவில்லை.

"சொல்லக் கூடாதுன்னா வேணாம்..."

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. ஊர் விவகாரத்தினால மனசு கொஞ்சம் பேதலிச்சுப் போயிருக்கு. வருவோர் போவோரோட ஆயிரம்தான் மூடி மறைச்சுக்கிட்டு மேலுக்கு முகம் கொடுத்துப் பேசினாலும், உள்ளுக்குள் ஏதோ நெருஞ்சி உறுத்தற மாதிரி ஒரு நெருடல் இருந்துக்கிட்டே இருக்கு."

"இதோபார் திருமலை. பூவுன்னு இருந்தா பூச்சின்னு ஒண்ணு இருக்கிறது சகஜம். இதுக்காக நாம் மனசு வியாகூலப்பட்டு என்ன ஆகப் போகுது? பிரச்னை என்னன்னு சொல்லு..."

"நீயும்கூட வரும்போது பார்த்திருப்பே. கோவிலும் அதன் பக்கத்திலேயே விசாலமான வேப்பமரமும்..."

"ஆமாம்... ஆல விருக்ஷம் போல பிரம்மாண்டமாய்..."

"அது. இன்று நேற்று மரமல்ல. எந்தக் காலத்ததோ. கோவில் அந்த இடத்தில் குதிர்வதற்கு முன்னாடியிருந்தே சின்னச் செடியாக வேர் பிடித்து, மரமாகி இன்று பெரிய விருக்ஷமாகக் கிளைபரப்பி விசாலமாய் வளர்ந்திருக்கிறது. அதன் வயசு மூணு நாலு தலைமுறைக்கு மேலேயே கூட இருக்கும்னு..."

## அருள்வாக்கு

குருடன் ஒருவன் கையில் லாந்தருடன் போய்க் கொண்டிருந்தானாம். எதிரில் வந்த ஒருவன், "உனக்குத்தான் கண் தெரியவில்லையே, லாந்தர் ஏன் எடுத்து வருகிறாய்?" என்று கேட்டான். அதற்குக் குருடன், "எனக்குக் கண் இல்லாவிட்டாலும் உனக்குக் கண் இருக்கிறது அல்லவா? அதற்காகத்தான் இதை எடுத்து வருகிறேன். இல்லாவிட்டால் இந்த இருட்டில் நீயே என் மேல் தடுக்கி விழுந்திருப்பாயே" என்றானாம். அதுபோலவே பழைய சாஸ்திரங்கள் நமக்குப் புரியாவிட்டாலும், எதிர்காலத்தில் யாருக்காவது புரியலாம், பயனாகலாம் என்பதனாலாவது அவற்றை நாம் ரட்சித்தாக வேண்டும். "வசதியே இல்லாத காலங்களில் யுகாந்தரமாக ரட்சிக்கப்பட்ட சாஸ்திரங்களை நமக்கு முதல் தலைமுறையினர் எல்லா வசதியிருந்தும் காப்பாற்றாமல் அழித்து நம்மை வஞ்சித்து விட்டார்கள்" என்று வருங்காலத் தலை

"இருக்கட்டும். விஷயத்துக்கு வா!"

"எங்க ஊர் நாட்டாண்மை நல்லசிவம், அதை வெட்டணுங்கிறாரு!"

"ஏன்?"

"போன மாசி மாசம் அமோகமா திருவிழா எடுத்ததிலே கிட்டத்தட்ட ரெண்டாயிர ரூபாய்க்குத் துண்டு விழுந்திருச்சி. பத்துநாள் உற்சவமும்... நீ பார்த்திருந்தியானா அப்படியே அசந்து போயிருப்பே. ஏக தடபுடலா செய்ததிலே கடன் வந்தாச்சு. இப்போ அது அடையணுமானா ஊர்ல இருக்கிற ஐம்பது குடும்பமும், தலா நாற்பது ரூபான்னு தர்மமாக் கொடுத்தாலே போதும்னு சொன்ன என் அபிப்பிராயத்தைத் தூக்கி ஓடப்பிலே எறியற மாதிரி நல்லசிவம் குறுக்கிட்டு, "ஊர்ல மழை இல்லாம பயிர் பச்சையெல்லாம் காஞ்சி கிடக்குது. மகசூல் கெட்டுக் கிடக்கிற இந்த சமயத்திலே வரிவம்புன்னு ஜனங்களைப் பிழியறது அவ்வளவு சரியில்லே. வேணுமானா அர்த்தமில்லாம இருக்கிற அந்த வேப்பமரத்தை விலையாடிட்டா நம்ம பிரச்னை விட்டுடும். அந்த ஆத்தாளுக்காக பட்ட கடனை அடைக்க இதைச் செய்யறதிலே ஒண்ணும் தப்பு இல்லே. அவள் பெயரைச் சொல்லி அதை வெட்டி ஏலம் போட்டா இரண்டாயிரம் இல்லே, அதுக்கு மேலேயும்கூட கிடைக்கும்"னு சொன்னப்போ, என் அபிப்பிராயம் ஜனங்க மத்தியிலே சப்புவிட்டுப் போச்சு."

"அவர் சொல்றதும் சரியாத்தானே படுது..."

"நானும் தப்பு சொல்ல வரலே. ஊரிலேயே அவர் மிகுந்த பசையுள்ள பேர்வழி. அவர் நினைச்சா அந்த ஆத்தாளுக்குப் பட்ட கடனைத் தாற்காலிகமாக ஏத்துக்கிட்டு, மகசூல்



முறையினர் நம்மைக் குற்றம் சொல்ல இடம் வைக்கலாமா?

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

**வா**னில் எவ்வளவோ நட்சத்திரங்களை இரவில் காண்கிறீர்கள், ஆனால் சூரியன் உதயமாகும் போது அவை ஒன்றையும் காண்பதில்லை. ஆகையால் பகற்பொழுதில் வானில் நட்சத்திரங்களே இல்லை என்று சொல்வீர்களா? அதுபோல, மனிதா! உன் அறியாமையின் போது கடவுளைக் காணவில்லையென்றால், கடவுளே இல்லையென்று கூறாதே.

- ஸ்ரீ ராமகிருஷ்ணர்

கூடுதலான சமயத்திலே ஜனங்ககிட்டே நாற்பதுங்கிறதை ஐம்பதாக் கூட வட்டியும் முதலுமா வசூல் பண்ணி எடுத்துக்கலாம். அதை விட்டுட்டு மூணு நாலு தலைமுறையா இருக்கிற வேப்ப மரத்தை இப்போ போய் அர்த்தமில்லாம வெட்ட வேண்டாம்னு தான்..."

"யோசனை நல்லாதான் இருக்கு. இருந்தும் உன் அபிப்பிராயத்தை ஏன் இந்த ஜனங்க ஏத்துக்கலே?"

"ஜனங்க சட்டி கட்டுதா கையை விட்டு தான்னுதானே பார்ப்பாங்க. அவங்கதான் இப்படின்னா... அவர் எரியற வீட்ல உருவறது லாபம்னு நினைக்கிறாரு..."

"எப்படி?"

"'ஆத்தாளுக்குப் பட்ட கடனை நான் ஏத்துக்கிறேன். அதுக்குப் பதிலா வேப்ப மரத்தை வெட்டி எடுத்துக்குவேன். இஷ்டமா'ன்னு கேட்டப்போ ஜனங்களுக்கு அவர் நோக்கம் புரியலே. எருமை மாட்டு முதுகிலே மழை விழுந்தாப்பலே என்னையில்லேன்னு இருந்தாங்க... ஆனா என்னால அப்படி முடியலே. மனசு பதைச்சுது..."

"ஏன்...?"

"என்னா... நல்லசிவம் டவுன் பக்கம் நவீன மோஸ்தரில் வீடுகட்ட பிரம்மாண்டமான அடிப்படை போட்டிருக்கார். சூளை கூடப் போட்டு வேகமாய் வேலை நடந்துகிட்டிருக்கு. கட்டடத்திற்கு வேண்டிய வாசக்கால், ஜன்னல் கப்போர்டு இதுக்கெல்லாம் மரப் பலகை சேகரம் பண்ணிக்கிட்டிருக்கார். மெட்ராஸ்ல எங்கேயோ மரம் பேசி முடிச்சி, அது இங்க வந்துசேர இரட்டிப்பு லாரி வாடகைக்குக் கொடுத்துக் கட்டுப்படியாகாததால..."

"சும்புக்குக் களை எடுக்கப் போயி தம்பிக்கும் பொண்ணு பார்க்கிறார்னு சொல்லு."

"அப்படியிருந்துட்டாக் கூடப் பரவாயில்லையே. மனுஷன் ஒட்டுமொத்தமா இல்ல சுருட்டப் பார்க்கிறார்."

"எப்படி?"

"சில விவரம் தெரிஞ்ச அனுபவஸ்தர்களைக் கூட்டி வந்து காட்டினேன். 'வைரம் பாய்ந்த, தேறின மரம். எப்படியும் அறுபது சதுரத்துக்கு மேலேயே கிட்டும். ஏலத்திலே விட்டா முப்பதினாயிரத்திலிருந்து முப்பத்தைந்தாயிரம் வரை போகும். வேண்டியதைத் துண்டாடி வீட்டு வேலைக்கு வச்சிக்கிட்டு, மிச்சமிருக்கிற முண்டு முடிச்சு கம்பு கிளைகளையெல்லாம் சூளைக்கு உபயோகப்படுத்திக்கலாம்னு..."

"நான் என்னமோன்னு நினைச்சேன். சரியான நல்ல பாம்பா இருப்பார் போலிருக்கே... அப்பப்பா... பயங்கர சுயநலம்."

"அவரோட சில்லுண்டித்தனம் உனக்குப் புரிஞ்சுட்டுது. ஜனங்களுக்குப் புரியலியே."

"அவ்வளவுதான் இந்த ஜனங்க..."

"இப்போ சொல்லு... இவரோட வஞ்சகம் அந்த ஆத்தாளுக்கே அடுக்குமா?"

வருத்தத்தின் பாதிப்பில் இரவு மல்லாந்த வாக்கில் வெகுநேரம் வரை தூக்கம் பிடிக்காமல் விழித்துக் கிடக்க வேண்டியதாயிற்று.

**ம**றுநாள் கிழக்கு வெளுக்குமுன்பே கோவிலில் கூட்டம் சேர்ந்திருந்தது. முண்டாசு கட்டிய முதியவர்களின் எண்ணிக்கை மிகுதியாகக் காண, அதில் பளிச்சென்று முக்கால் கையில் சட்டை போட்டு, முறுக்கி விட்ட கனத்த மீசையோடு நடுநாயகமாய் உட்கார்ந்திருப்பவர்தான் நாட்டாண்மை நல்லசிவம் போலிருந்தது. நல்ல ஆஜானுபாகுவான தோற்றத்தில் எத்தனை அல்பத்தனமான எண்ணங்கள்!

அப்பொழுது ஒரு முதியவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

"அந்த ஆத்தாளுக்குப் பட்ட கடனுக்காக அதை அடைக்கணுமேன்னு அக்கம்பக்கத்திலே கடன் கேட்டுச் சமாளிக்கிறது ஆகாத விஷயம். அது பின்னாடி நமக்குத்தான் தலைமூட்டை. நம்ப நல்லசிவம் சொல்றாப்பல வெளியில கடனும் படாம, ஜனங்களையும் வரிவம்புன்னு வதைக்காம, மரத்தை நல்ல சிவத்துகிட்ட ஏலம் விடறதுதான் உத்தமம்னு படுது..."

"பெரியவங்க காலத்து மரமாச்சே. அதை வெட்டலாமா விற்கலாமான்னு பார்த்தா விவகாரம் முடியாது. நாம அதை ஏலம் விட்டு நம்ப வீட்டுக்கு ஒண்ணும் கஞ்சிக்கு இல்லே, கருவாட்டுக்கு இல்லேன்னு கொண்டு போயி

டலே. ஒட்டுமொத்தமா அந்த ஆத்தாளுக்குப் பட்ட கடனைத்தான் அடைக்கப் போறோம். இதிலே ஒண்ணும் தப்பு இல்லே. அது நம்ப அவசரத்துக்கு உதவாம போறதுதான் தப்பு..."

பெரியவர் திறமையாகவே சப்பை கட்டு கட்டினார். இவர் இவ்வளவு நேர்த்தியாய் பூமுடிக்க நல்லசிவம் இவருக்கு மகிழ்ந்து கொடுத்த இனாம் எவ்வளவோ. அது அந்த ஆங்காளிக்கே வெளிச்சம்.

அப்பொழுது...

"அதோ பாருங்க. அந்தப் பசங்களைக் கொஞ்சம் சத்தம் போடாம இருக்க அதட்டி வையுங்க" - நல்லசிவத்தின் பக்கத்திலிருந்த யாரோ ஒரு பெரியவர் குரலெழுப்பினார்.

அதட்டல் விழுந்த பக்கம் நான் பார்வையை விட்டெறிந்தேன். வேப்ப மரத்தின் கீழே ஏழெட்டுப் பிள்ளைகள் ஓடிப்பிடித்து கராமுரா என்று சத்தம் போட்டுக் கொண்டிருந்தன. அதில் என் பேத்தி பவித்ராவும் ஒருத்தியாய்க் கலந்திருந்தாள். போகிற இடமெல்லாம் கூடிக் குலவ இந்தக் குழந்தைகளால் மட்டும் எப்படித்தான் இயலுகிறதோ - என்று எண்ணி வியந்த சமயம், முன்னதாகப் பேசிய பெரியவர் மறுபடியும் திருவாய் மலர்ந்தார்.

"இதோ பாருங்க நாட்டாண்மை, நீங்க இப்போ தரப் போற தொகைக்கு இந்த வேப்ப மரம் பெறுமானாலும் பெறாது போனாலும் தயவு செய்து பெரிசுபடுத்தாதீங்க. ஏதோ பெரிய மனசு வச்சு மரத்தை எடுத்துக்கிட்டு அந்த ஆத்தாளுக்குப் பட்ட கடனைத் தீர்த்திடுங்க."

அவ்வளவுதான். மூலைக்கு மூலை அவர் வார்த்தைக்கு வரவேற்பும் ஆமோதிப்பும் அதிகமாயிருந்ததால் இரண்டொரு கனத்த எதிர்ப்புகள் முனை மழுங்கி கரத்துவிட்ட சமயம் —

குழந்தைகளின் மத்தியிலிருந்து திடுமென விசித்திரக் குரல் எழ, அத்தனை பேரும் பார்வையை அந்தப் பக்கம் பாய்ச்சிய பொழுது, ஆகா ஊஹூ" என்று கூச்சலிட்டபடி தலைவிரிகோலமாய் துள்ளித் துள்ளி ஆடிய பவித்ராவின் கைகளில் கொத்துக் கொத்தாய் வேப்பிலைக் கோப்புகள்.

நினைக்கும்பொழுதே எனக்குப் புல்லரித்தது.

அரக்கப்பரக்க எழுந்து கொண்ட ஏகப்பட்ட பேர் ஆத்தாளுக்கு என்ன குறையோ என்று பயபக்தியோடு சூழ்ந்தனர். இதற்குள் உடுக்கை பம்பை சகிதம் பூசாரிகள் வந்து சாமி பிடித்து ஆடிய குழந்தை பவித்ராவைக் குற்றம் குறை வினவினர்.

சற்றுத் தள்ளி உட்கார்ந்திருந்த திருமலை சடாரென்று என்னை அணுகி, "இதென்ன சங்கடம். வந்த இடத்திலே குழந்தை இப்படி சாமி பிடித்து ஆடுதே. இப்போ என்ன பண்றது?" என்று தவிக்கவே நான் கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தேன். பயங்கரமான ஆட்டம். தெய்வமே அவள் திருப்பாதத்திற்குத் தெம்பு கொடுத்து ஆடச் செய்வது போலிருந்தது.

"அம்மா தாயே, நீ யாரம்மா?" பூசாரி ஒருவர் கேட்டார்.

"என்னையாடா யாருன்னு கேட்கிறே? பெற்ற தாயைப் பிள்ளைகள் மறந்தாலும், பெற்றெடுத்த பிள்ளைகளை இந்த ஆங்காளி என்னைக்குமே மறந்ததில்லேடா."

"தெண்டனிடறோம் தாயே. இத்தனை காலமும் இல்லாம இன்னைக்கு என்ன குறை வந்ததுன்னு உன் திருச்சபையிலே எழுந்தருளி இப்படிக் கோர தாண்டவமாடறே தாயே? உனக்கு நாங்க என்னதான் குறை வச்சோம், சொல்லு தாயே?"

"பிள்ளைகள் செய்கிற குறையைத் தாய் பெரிசா மதிக்கிறதில்லேடா. இருந்தாலும் இப்போ செய்யப் போற குறையை என்னால பொறுக்க முடியலேடா. இப்பவே எனக்கு உடம்பெல்லாம் அனலா தகிக்குதடா. இன்னும் இந்த விருக்ஷத்தையும் வேர் பறிச்சா, அப்புறம் நான் எந்த நிழலிலேடா குடியிருப்பேன்?

"கிணறு தோண்டுகிற காண்ட்ராக்டுகளை எடுத்துச் செய்த பிறகு... நம்ம ராமசாமியோட நிலைமை எப்படி இருக்கு? பரவாயில்லையா?"

"ஓ! HE IS WELL-OFF!"

— பெ. கலாசாமி





## டேக் இட் ஈஸி

கிச்சு கிச்சு மூட்டும் நாடகங்களில் கதை இருக்காது. கதை இருக்கிற நாடகங்களில் ஊறுகாயாகக் கூட ஹ்யூமர் இருக்காது. இது பொதுவாகத் தமிழ் நாடகங்களின் இன்றைய நிலை.

மாற்றியிருக்கிறார் (பாரதிராஜாவின் 'வேதம் புதிது' படத்தின் கதை - வசன சொந்தக்காரர்) கண்ணன். ஒரு சீரியஸான கதைக்குத் தமாஷ் முலாம் பூசுகிற முயற்சியில் நிச்சய வெற்றி பெற்றிருக்கிறார்.

ரொம்ப சாதுவான, நேர்மையான வங்கி கேஷியர், ஒரு கண நேர சபலத்தில், கல்லாப் பெட்டியில் கை வைத்து விடுகிறார். (சகோதரி திருமணம், வேலையில்லாத தம்பி என்று மிடில் கிளாஸ் அவலப் பின்னணி) வீட்டில் ஒளித்து வைத்திருக்கிற அந்தப் பணம் சஸ்பென்ஸாகக் காணாமல் போய்விட, பயமும் திகிலும் மனசாட்சி உறுத்தலுமாக இரண்டு மணி நேர அட்டகாச ரகளை.

ஹீரோ நியூஸ் வரதராஜனுக்கு அசட்டுத்தனம் கலந்த நடிப்பு வெகு லாகவமாக வருகிறது. நொடிக்கொரு வெடிச்சிரிப்பு. சிரித்து முடிந்ததும் யோசித்தால் உறைய வைக்கிற யதார்த்தம்.

நாடகத்தின் பெரிய பலம், அடுத்தடுத்து மொட்டவிழ்கிற சம்பவங்களின் வேகம். ஒரு சினிமாவுக்குரிய திரைக்கதை இறுக்கம்.

கதையைச் சுபமாக முடிக்க வேண்டும் என்பதற்காக, கிளைமேக்ஸில் கொஞ்சம் கூடைகள் பூவைக் காதில் சுற்றியிருக்கிறார்கள். ஆயினும் அபத்தமில்லாத ஆரோக்கியமான நாடகங்கள் வரத் தொடங்கியிருப்பது நல்லதுக்கே.

நடிகர்கள் அத்தனை பேரும் நியூஸ் ரீடர்கள் போல முழுக்க முழுக்க ஆடியன்ஸைப் பார்த்தே பேசுகிறார்கள்.

இந்த ஒரு அமெச்சூர்த்தனத்தை விலக்கிப் பார்த்தால் டபுள் ஓகே!

— ஆர்.பி.ஆர்.

ஊரை ரெண்டுபடுத்தற உங்க உளுத்துப் போன அன்பிலே இல்லேடா. இந்த விருட்சம் பரம்பரை பரம்பரையா இருக்கேன்னுதான்டா இங்கே தங்கியிருக்கேன். அடேய் நல்லசிவம்..."

"தாயே!"

"பைத்தியக்காரா... இந்த ஆங்காளிக்கு ஏதடா கடன்? என்னைத் திருப்திப்படுத்த நீ செய்த தொண்டை எனக்குப் பட்ட கடனாவா நினைக்கிறே? என் நிழலை அழித்து நீ பூர்த்தி செய்து கொள்ளப் போற ஆசைக்கு உனக்குப் போதாத காலம் வந்துட்டுதடா."

"தாயே... தாயே.... நான் ஏதோ கண்மூடித்தனமா இறுமாப்பிலே செய்யத் துணிஞ்ச பிசகுக்கு ஏதும் என்னை சபிச்சிடாதே தாயே. உன் பிள்ளை வாழவேண்டியவன். வளரவேண்டியவன். உன்னை திருப்திப்படுத்துறதுக்காகச் செய்த திருத்தொண்டின் செலவை நானே ஏத்துக்கறேன் தாயே. எனக்கு நல்ல வாக்கு சொல்லு தாயே?"

"உன் வார்த்தையிலே எனக்கு நம்பிக்கை இல்லேடா."

"இந்த ஊரார் மத்தியிலே நான் கையடிச்சு சத்தியம் பண்ணித் தரேன் தாயே. உனக்கு நிழல் தார இந்த மரத்தை இனிப் போற்றி வளர்ப்பேனே தவிர, கேடு நினைக்க மாட்டேன் தாயே. இது சத்தியம். என்னை நம்பு தாயே."

"நான் மலையேறரேன்டா..."

வேப்பிலையை மறமற என்று மென்று துதப்பியவள் அப்படியே களைத்து சோர்ந்து போகவே, நான் பனிச்சென்று தூக்கித் தோள் மேல் போட்டுக் கொண்டு வேகவேகமாய் வீட்டுக்கு விரைந்தேன். பின்னாலேயே திருமலையும் ஓடிவந்தார்.

அப்பொழுது தோளில் கிடந்த பவித்ரா, "நீங்க சொல்லிக் கொடுத்த டயலாக்லே ஏகப்பட்ட டிஃபரன்ஸ் தாத்தா. அதனால நானே ஒனா கொஞ்சம் சேர்த்துக்கிட்டேன். வாய் தொண்டையெல்லாம் ஒரே கசப்பு. எனக்கு ஏதாவது ஒரு ஜூஸ் வேணும் தாத்தா" என்று முனகவே -

"உஸ், மெதுவாப் பேசு. யார் காதிலயாவது விழப் போகுது" என்றேன். அந்தச் சமயம் பின்னாலேயே ஓடிவந்த திருமலை சொல்லிக் கொண்டார் : "ஒரு நல்லதை ஆமோதிக்க ஐம்பது பேர் தேவையில்லே. ஒரு தெய்வம் துணையிருந்தால் போதும்னு தெரிஞ்சு போச்சு."

சினிமாவை முன்பு குறை கூறியவரிடம் சினிமா டயலாக் பயனளித்ததை நான் சொல்லவில்லை!

# அபத்தத்தின் உச்சம்!

**சமீபகாலமாக, தமிழ் சினிமாக்களில் எப்படியாவது ஒரு கோர்ட் சீன் நுழைந்து விடுவது வழக்கமாகி இருக்கிறது. சமீபத்தில் 'வில்லாதி வில்லன்' வந்த பிறகு, இந்தப் பித்தம் இன்னும் கூடுதலாகி இருப்பதாகச் சொல் கிறார்கள். ஹீரோ, "யுவர் ஆனர்" என்று தொடங்கி செந்தமிழில் ஒரு குயர் வசனம் பேசுவது அந்தக் காலத்திலிருந்தே இருப்பது நானெனினும் "இவையெல்லாம் படு அபத்தம்" என்று ஒரேயடியாகச் சீறி எழுகிறார் ராண்டார் கை.**

**வழக்கறிஞர். தவிர திரை உலகைப் பற்றிப் பல கட்டுரைகளும் எழுதி வருபவர்.**

**அவர் சொல்கிறார் :**

"நீதிமன்றக் காட்சிகளில் இடம்பெறும் பல விஷயங்கள் அபத்தத்தின் உச்சம். சில, சட்ட விரோதமானவை கூட! அமெரிக்க நீதி மன்றங்கள் கொஞ்சம் இன்ஃபார்மலானவை. இங்கு அப்படி அல்ல. என்றாலும் தொடக்க காலத்தில் ஹாலிவுட் படங்களை உதாரண மாகக் கொண்டுதான் தமிழ்ப் படங்கள் தயாரிக்கப்பட்டன. இதனாலோ என்னவோ, நீதிமன்றக் காட்சிகள் கூட அப்படியே காப்பி யடிக்கப்பட்டன. போதாக்குறைக்குப் பல விசித்திரங்கள் வேறு சேர்க்கப்பட்டன.

"நம் நாட்டு நீதிபதி யாரும் "ஆர்டர் ஆர்டர்" என்று தன் மேஜையில் சுத்தியலால் தட்டுவதில்லை – காரணம் அவர்களிடம் சுத்தி யலே இருப்பதில்லை! எந்த வழக்கறிஞரும் நின்று கொண்டோ உட்கார்ந்து கொண்டோ தம் தரப்புவாதங்களை அடுக்கலாமே தவிர நம் திரைப்படங்களில் வருவது போல அங்குமிங்கும் நடந்து கொண்டே கனல் வச னங்களைக் கொட்ட முடியாது. அது நீதிமன்ற அவமதிப்பாகக் கூடக் கருதப்படலாம்! "இந்தப் பாயிண்ட்டை குறித்துக் கொள்ளுங்கள் மை லார்ட்" என்று நீதிபதிக்கு எடுத்துச் சொல்வது கூட அப்படித்தான்.

"அவர் இப்படிச் சொன்னார், இவன் இப் படிக் குறிப்பிட்டான்" என்று சாட்சிகள் சொல்வதெல்லாம் அப்படியே ஏற்றுக் கொள் ளப்படும் விந்தை நம் சினிமாவில் உண்டு. 'சாட்சி விதிகளின்'படி மற்றவர்கள் சொன்ன தாகக் கூறப்படும் சாட்சிகளுக்கு ('ஹியர்ஸே எவிடென்ஸ்') நீதிமன்றத்தில் மதிப்பு கிடை யாது என்பதுதான் உண்மை. கடிதங்களெல் லாம் சினிமாவில் முக்கிய சாட்சியமாக ஆகி விடுகிறது. சட்டத்தின் பார்வையில் அந்தக் கடிதம், 'தான் எழுதியதுதான்' என்று எழுதிய வரே சாட்சிக் கூண்டில் ஏறிக் குறிப்பிட்டால் மட்டுமே அந்தக் கடிதத் துக்கு மதிப்பு உண்டு!

## நீதிமன்றக் காட்சிகள் :



"மாவட்ட நீதிமன்றம், உயர்நீதிமன்றம், உச்சநீதி மன்றம் எல்லாவற்றிற்கும் ஒரே செட்தான். சினிமா வைப் பொறுத்தவரை இவற்றில் எந்த நீதிமன்ற

• ராண்டார் கை





"நீ மட்டும் வந்திருக்கியே, மாப்பிள்ளை வரலையாம்மா...?"

"பெரிசா எதுவும் மூட்டை, முடிச்சு இல்லாததால அழைச்சிட்டு வரலைப்பா!"

– சீர்காழி. வி. ரேவதி

மாக இருந்தாலும் சாட்சிகளுக்கும், குறுக்கு விசாரணைக்கும் வாய்ப்பு உண்டு! ஒரு மாவட்ட நீதிமன்றத்தில் இரண்டு நீதிபதிகள் ஒரே சமயத்தில் இணைந்து செயல்படுவதான அபத்தம் கூடத் திரையில் இடம்பெற்றிருக்கிறது!

"ஒரு தெலுங்குப் படத்தில் இன்னும் ஒரு படி மேலே போயிருக்கிறார்கள். அதில் இரண்டு சாட்சிகள் ஒரே கூண்டில் நிற்க வைக்கப்படுகிறார்கள். போதாக்குறைக்கு சபலக்காரரான நீதிபதி, சாட்சிக் கூண்டில் நிற்கும் கவர்ச்சிக் கன்னியைப் பார்த்துக் கண்ணடிப்பது போன்ற காட்சி வேறு!"

இப்படி இயல்பில்லாத பல விஷயங்களை எதற்கு நீதிமன்றக் காட்சிகளில் புகுத்த வேண்டும்? நீதிமன்றக் காட்சி என்றாலே உணர்ச்சிப் பிரவாகமாகக் கொட்ட வேண்டும் என்ற எதிர்பார்ப்பினாலா?

"அப்படிச் சொல்ல மாட்டேன். அறியாமைதான் முக்கியக் காரணம். திரைக்கதையை எழுதுபவருக்கு நீதிமன்றத்தைப் பற்றிய ஞானம் இருப்பதில்லை. முன்பு வந்த திரைப்பட நீதிமன்றக் காட்சிகளை அவர் அளவுகோலாகக் கொள்ளுகிறார்! வசனகர்த்தாக்களோ, பக்கம் பக்கமாகத் தன் திறமையைக் காட்ட நீதிமன்றக் காட்சிகள் மிகவும் ஏற்றவையென்று நினைத்துக் கொள்கிறார்கள். பிறகு அபத்தத்துக்கென்ன குறைவு?"

சென்சார் ஏன் இதுபோன்ற காட்சிகளில் தலையிடுவதில்லை?

"ஆபாசம், வன்முறை ஆகிய இரு கோணங்களில்தான் கத்திரிக்கோலைப் பயன்படுத்த வேண்டும் என்று அவர்கள் பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறார்கள். 'அபத்தமான, இயல்பில்லாத ஃப்ரேம்களையெல்லாம் வெட்ட வேண்டுமென்றால் டைட்டில் கார்டுகளைத் தவிர வேறு எதுவுமே பல படங்களில் மிஞ்சாது' என்று சென்சார் போர்டில் இருந்த என் வக்கீல் நண்பர் ஒருவரே குறிப்பிட்டார்!"

ஒரே ஒரு தமிழ்த் திரைப்படத்தில் கூடவா நீதிமன்றம் சரியான முறையில் சித்திரிக்கப்படவில்லை?

"1939-ல் வெளியான 'அதிர்ஷ்டம்' என்ற படத்தில் நீதிமன்றக் காட்சி நடைமுறைக்கு ஏற்றதாக இருந்தது. எஸ்.டி.எஸ்.யோகி என்பவர் இயக்கிய அந்தப் படத்தில் கே. ஆர். செல்வம் என்பவர் பெண் வக்கீலாகத் தோன்றிப் பிரமாதப்படுத்தியிருந்தார். எஸ்.வி. சஹஸ்ரநாமத்தின் 'இழந்த காதல்' என்ற நாடகத்தின் தொடக்கக் காட்சியே நீதிமன்ற 'செட்'தான். அதில் அபத்தம் எதுவும் இடம் பெறவில்லை. இப்போது 'கானூன்' (சட்டம்) என்ற தொலைக்காட்சித் தொடர் நீதிமன்ற நடப்புக்களை சித்திரிப்பதைக் கண் கொண்டு பார்க்க முடிவதில்லை" என்ற ராண்டார்கையிடம் அவர் எழுதி தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்பட்ட "லட்சுமிகாந்தன் கொலை வழக்கு" பற்றிய தொடரில் இடம்பெறும் நீதிமன்றக் காட்சிகள் பற்றிய கருத்தைக் கேட்டோம்.

"அவை எனக்குச் சங்கடத்தை ஏற்படுத்தின. அந்தத் தொடரை எழுதியது நான்தான் என்றாலும், அதைப் படமாக்கியதில் என் பங்கு எதுவுமேயில்லை. 1952-ல் நடந்த நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்ட அந்தத் தொடரில் அப்படி ஒரு சங்கத் தமிழைப் பாத்திரங்கள் நீதிமன்றத்தில் பேசியிருக்க வேண்டாம்...." என்றார் வெளிப்படையாக!

– ஜி.எஸ்.எஸ்.

"அந்த சாமியார் உடம்பிலே எப்படி இவ்வளவு காயம் ஏற்பட்டது?"

"கூடு விட்டுக் கூடு பாயறதா சொல்லி, தேன் கூட்டிலே பாஞ்சுட்டார்!"

– வெ. ராஜாராமன்



# மாலை மயங்குகின்ற நேரம்

ரமணி சந்திரன்

இந்தத் திருமணத்துக்கு உதயரேகாவின் வீட்டில், அப்படி ஒன்றும் எளிதாகத் தலையாட்டிவிடவில்லை

"உன் பெற்றோரிடம் சொல்வது என் பொறுப்பு," என்று பிடிவாதமாக வந்து, நடந்த விவரம் சொல்லிவிட்டுக் காந்திமதி திரும்பிச் சென்றபின், அங்கே சற்று நேரம் பயங்கர அமைதி நிலவியது.

கண்ணாடியைத் துடைத்து மாட்டுவது போன்ற பாவனையில் யோசிக்க அவகாசம் எடுத்துக் கொள்வது உலகநாதனின் தந்திரம். இன்றும் மிக நன்றாகக் கண்ணாடியைத் துடைத்து மாட்டியபின், "என்னம்மா விஷயம்? 'ஃபாரின் ரிட்டர்ண்ட்' மாப்பிள்ளைகளை எல்லாம் வேண்டாம் என்று விட்டு... அந்த அம்மாவே மகனைப் பற்றி நன்றாகப் பேசக் காணோம். பிறகு ஏன் இந்தத் திருமணம்?" என்று கேட்டார் அவர்.

"என் பெயர் கெட்டுப் போய்விட்டதே அப்பா!" என்றாள் மகள் சோகமாக.

"ஆன்ட்டி சொல்லவில்லை?"

மகளைக் கூர்மையாக நோக்கி, "அந்தப் பையன் ஏதும் எல்லை மீறி.... அதற்காகப் பழைய காலப் பத்தினியாகும் மடத்தனமா?" என்று உலகநாதன் கேட்கவும், ஓடிவந்து, அவர் அருகில் அமர்ந்து, "நான் உங்கள் பெண் அப்பா. அவ்வளவு இலகுவாக என்னை யாரும் எதுவும் பண்ண முடியுமா? எனக்குப் பிடித்திருக்கிறது. அதனால்தான்..." என்றாள் மகள் கொஞ்சலாக.

"ம்ம்... இனி, சாயங்காலம் இதுபற்றிப் பேசுவோம். இப்போது எனக்கு வேலையிருக்கிறது. இலாகா டைரக்டர் டெல்லியிலிருந்து வருகிறார். சீக்கிரம் போக வேண்டும்" என்று கிளம்பினார் பெற்றவர்.

வருங்கால மருமகனைப் பற்றி உலகநாதன் விசாரிக்கப் போகிறார் என்று உதயா புரிந்து கொண்டாள். ஆனால் அவரைச் சமாளித்துக் கொள்ளலாம் என்ற தைரியமும் இருந்ததால், அவள் பெரிதாகக் கவலைப்படவும் இல்லை.

கணவரை அலுவலகம் அனுப்பிவிட்டு வந்த யசோதாவை எதிர்கொள்ளவும் உதயரேகா தயாராகத்தான் இருந்தாள்.

"கொஞ்ச நாட்களாகவே எனக்கு உறுத்தலாகத்தான் இருந்தது. ஒரேயடியாய் அவர்கள் வீட்டுக்குப் போகிறாயே என்று நினைத்தேன். அவர்கள் மகன் வீட்டோடு இல்லை என்பதால் பரவாயில்லை என்று பார்த்தால் இதென்ன தடாலடி அடிக்கிறாய்? உண்மையைச் சொல்லு, என்ன காரணம்?" என்று யசோதா சீரியஸாக விசாரித்தாள்.

"நான்தான் கெட்டுப்போய் விட்டேனே, சித்தி!" என்று இமைகளைப் படபடவென்று கொட்டினாள் மகள்.

"நாக்கில் நரம்பில்லாமல் என்ன பேச்சு பேசுகிறாய்? நான் வளர்த்த பெண், கெட்டுப் போவதெல்லாம் நடக்காத காரியம்; எனக்குத் தெரியும்" என்றாள் குரலில் சினத்துடன்.

தலையைச் சரித்து, சிற்றன்னையை ஒரு பார்வை பார்த்து, "அம்மாவாய் வளர்த்திருந்தால் அதுசரிதான். ஆனால், நீங்கள் சித்தியாய்த்தானே வளர்த்தீர்கள்?" என்று புருவங்களை உயர்த்திக் காட்டினாள் உதயா.

"எ... என்னடி நீ? உன்னை எவ்... எவ்வளவு அன்பாய் நான்... உன்னால் எப்படி இப்படி...?" என்று யசோதா தவிக்கவும் அவளுக்கே ஒருமாதிரியாகி விட்டது.

"உங்கள் அன்பில் குறை சொன்னால் எனக்கு நரகம்தான் கிடைக்கும் சித்தி" என்றாள் ஆறுதலாக. "ஆனால்..."

"என்ன ஆனால்? சொல்லு. சொல்லிவிடு. உனக்கு நான் என்ன குறை வைத்தேன் என்று எனக்கும் தெரிய வேண்டும், இல்லையா?" தவிப்புடன் இப்போது கோபமும் கலந்திருந்தது.

சிறு யோசனைக்குப் பின், நிமிர்ந்து, "அப்போது பானுவுக்குப் பதினாறு வயது. பெரிய மாமா வீட்டினர் நம் வீட்டுக்கு வந்திருந்தார்கள். பானு, மாமா பையன் முரளியின் சட்டைப் பையில் இருந்து எதையோ எடுத்தாள். அப்போது நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று கேட்டாள் உதயா.

புருவம் சுளித்து யோசித்துவிட்டு, "என்ன செய்தேன்? எனக்கு நினைவில்லையே?" என்றாள் யசோதா. "இவ்வளவு

## 6

தெளிவாய் ஞாபகம் வைத்திருக்கிற நீதான் அதையும் சேர்த்துச் சொல்லிவிடேன்!"

"பானுவை உள்ளே அழைத்துச் சென்று நன்றாக அறைந்தீர்கள். அவளுக்கு முதல் அறை விழுந்த அடுத்த வினாடியில் அந்த வேறுபாடு என் நெஞ்சில் தெளிவாகப்பட்டு விட்டது சித்தி. எனக்கு அப்போது பதினெட்டு வயது. அன்றுவரை நீங்கள் என்னை அடித்ததே கிடையாது. இத்தனைக்கும், பானுவைவிட நான் நன்றாகப் பழகுவேன். முரளியுடைய அண்ணன் மது, அவன் காதைக் கூடப் பிடித்துத் திருகியிருக்கிறேன். ஆனால்... நீங்கள் எனக்கு அம்மாவாய் இருந்திருந்தால் என்னையும் அடித்திருப்பீர்கள் இல்லையா?"

இமை தட்டாத நேர்ப்பார்வையுடன் பெண் கேட்கவும், யசோதா திகைத்துப் போனாள்.



சில வினாடி வாயடைத்து நின்றுவிட்டு, "உன் மேல் என் விரல் ஒன்று பட்டிருந்தாலும் உன் பாட்டி - அக்காவுடைய அம்மா என்னைக் கூறு போட்டிருப்பார்கள். உன் அப்பாவே, எங்கள் திருமணத்தின் போது, உன்னைக் கண்கலங்காமல் வளர்க்க வேண்டும் என்றாரே தவிரத் தாயாய் இருந்து வளர்க்கும்படி ஒருதரம் கூடச் சொல்லவில்லையே? அப்படியிருக்க, எந்தத் தைரியத்தில் உன்னை நான் அடிப்பேன்?" என்றாள் யசோதா கண்கலங்க.

ஓடிச் சென்று சிற்றன்னையை அணைத்துக் கொண்டு, "அச்சோ! உங்களை நான் குறைகூறவில்லை, சித்தி. ஆனால், எப்போது என்னை அடிக்க உங்களுக்கு முடியவில்லையோ, அப்போது என்னை அதிகாரம் செய்யவும் முடியாது. இல்லையா? அதைத்தான் சொல்கிறேன். அன்றைக்கும் அதைத்தான் உணர்ந்தேன். நினைவிருக்கிறதா? பதினெட்டு வயதிற்குப் பிறகுதானே கராத்தே வகுப்புக்குப் போனேன்? தனியாக வெளியே சென்று வரத் தொடங்கியதும் அப்போதுதான். நான் மீறிப் பிடிவாதம் செய்திருந்ததால் உங்களால் என்னைத் தடுக்க முடியாமல் போயிற்று. இப்போதும் அப்படித்தான், சித்தி. கிருஷ்ணசந்திரனை நான் மணக்கத்தான் போகிறேன். அதையும் உங்களால் தடுக்க முடியாது. அதனால் வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள்" என்றாள் உதயரேகா.

மாலையில் வீடு வந்த தந்தைக்கும் அவ்வளவாகத் திருப்தி இல்லைதான்.

"பையனை நேரிலேயே போய்ப் பார்த்தேன், உதி. 'திருமணத்தை நிறுத்துவதோ, நடத்துவதோ உங்கள் விருப்பம்' என்று விட்டேற்றியாகப் பேசுகிறானே!"

"நுகத்தடியில் கட்டப்படப் போகும் மாடு மாதிரி மிரள்கிறார் அப்பா. திருமணம் ஆனால் சுதந்திரம் போய்விடுமாம்!"

"அப்படியா? ஆனால் வெளியே விசாரித்ததிலும் அவனுக்கு அவ்வளவாக நல்ல பெயர் இல்லையேடா. இடையில் மாறியதாகத்தான் கேள்வி. திருத்த முடியாத கேஸ் இல்லைதான்; ஆனால் உனக்கு ஏனம்மா இந்தப் பாடு?"

"அது... அதுவாப்பா? அப்பா, எப்படியும் என்னையும் அவரையும் சேர்த்து ஒரு மோசமான பேச்சு உருவாகிவிட்டது. இனி இதை விடுத்து, வேறே ஆளுடன் திருமணம் நடந்தாலும், அந்த ஆளுக்குச் சந்தேகப் பேய் பிடித்துவிட்டால் என்னப்பா செய்வது? என் வாழ்க்கையே நரகம் ஆகிவிடாதா? அதோடு, சொல்லுங்கள் அப்பா, நான் தப்பாக ஒரு முடிவு எடுப்பேனா? என்மேல் அந்த நம்பிக்கை உங்களுக்கு இல்லையா?"

"சேச்சே, அப்படி இல்லையடா. வீணாக நீ கஷ்டப்பட வேண்டுமா என்று பார்த்தேன். மற்றபடி, உதயா ஒன்று சொன்னால், என்ன ஏது என்று கூடக் கேளாமல் அதைச் செய்துவிடுவது நல்லது. ஏனெனில் அவள் சொல்வது சரியாகத்தான் இருக்கும் என்று உன் சித்தி எப்போதும் சொல்வாளே...!"

வேறு வழி! கைமீறும் பெண்ணைத் தானாகக் கண்டிக்கவும் தைரியம் இல்லை; புகார் சொன்னால் பெற்றவருக்குப் பிடிக்காது. எனவே, தானும் ஒப்புவது போலவும், ஒப்புவதுதான் சரி என்பது போலவும்தான் பேசியாக வேண்டும்! பாவம் சித்தி!

அதற்குமேல் பெரிய பிரச்னை எதுவுமின்றி, உதயரேகா - கிருஷ்ணசந்திரன் திருமணம் இனிதே நிறைவேறிற்று. வேறு வகையில் தடை செய்யாவிட்டாலும், அவன் தரப்பிலிருந்து திருமணத்தை நிறுத்திவிடும்படி கிருஷ்ணசந்திரன் உதயரேகாவிடம் சில தடவைகள் கேட்டிருந்தான். எனவே, மணநாள் இரவைப் பற்றி அவள் பிரமாதக் கற்பனை ஏதும் செய்துவிடவில்லை. கூடவே, பெருமளவு இன்றைய நடப்பையே எதிர்பார்த்தும் இருந்ததால், உள்ளே கலக்கமோ, வெளியே ஆர்ப்பாட்டமோ இல்லாமல் பேசாமல் படுத்துவிட்டாள்.

சற்றுநேரம் பழைய நினைவுகளை உருட்டிக் கொண்டு இருந்தவள் விரைவிலேயே உறக்கமும் கொண்டாள்.

ஆனால், வழக்கமான ஆழ்ந்த தூக்கம் அல்ல.

ஒருதரம் நித்திரை கலைந்தபோது, அவன் வெளியே 'சிட்-அவுட்'டில் அமர்ந்து, புகை பிடிப்பது தெரிந்தது.

ஆக, இந்தப் பழக்கம் வேறு இருக்கிறதா? ஏற்கெனவே பழகி வைத்திருக்கும் பெரிய பெரிய கெட்டதுகளை எல்லாம் விரட்டிய பிறகு, இதற்கும் முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்... நம்பிக்கையோடு எண்ணமிட்டபடியே மீண்டும் கண்ணயர்ந்தாள் அவள்.

காலையில் அவள் எழுந்தபோது அவன் தூங்கிக் கொண்டுதான் இருந்தான்.

ஓசைப்படாமல் அருகில் சென்று சற்று நேரம் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள் உதயா.

செதுக்கினாற் போலக் கிருஷ்ணசந்திரனின் முக அமைப்பு படுத்த நிலையில் இன்னமும் எடுப்பாய்த் தெரிந்தது. ஆனால், கண்களில் கடினமும் முகத்தில் இறுக்கமும் கூடவே, உதடுகளின் அழுத்தமும் இல்லாததால், ஏதோ, பாதுகாப்பற்ற சிறுவனைப் போலத் தோன்றினான் அவன். முகம் சற்று வெளுத்தாற்போல இருந்தது.

அச்சத்தில்தானே முகம் வெளுக்கும்?

அப்படியே, அவன் முகத்தை வயிற்றோடு அணைத்து ஆறுதல் அளிக்க வேண்டும்போல ஒரு வேகம் உள்ளே எழ, தன்னை அறியாமல் கட்டிலை ஒட்டி இரண்டு எட்டு எடுத்து வைத்தவள் சுயநினைவு வந்து சட்டென நின்றாள்.

என்ன முட்டாள்தனம்!

இப்போது நொந்து கலங்கியிருப்பவர்கள், அரவணைத்துத் தேற்றப்பட வேண்டியவர்கள் இவனுடைய பெற்றோரும் சகோதரியும். அடிபட்டவர்களை விட்டுவிட்டு அடித்தவனுக்கு இரங்குவதா? அவளது புத்தியும் அவ்வப்போது புல்மேயப் போய்விடுகிறது!

அதோடு, இன்றைய மனநிலையில் அவளது கரிசனத்தை அவன்தான் ஏற்கப் போகிறானா? அதற்கெல்லாம் இன்னும் கொஞ்சம் அவகாசம் வேண்டும். அதுவரை, தக்க தருணம் நோக்கி அவள் பொறுமையோடு காத்திருந்தே ஆகவேண்டும். பொறுத்தார்தான் பூமி ஆள்வார்!

மணமக்கள் இருவருடைய பெற்றோர்

"அய்யோ! அம்மா! அய்யோ அப்பா! ஹைய்யோ... என்று வலிதாங்காம நீ கத்தினதைப் பார்த்த உன் மாமனார் என்னப்பா சொன்னார்?"

"இசை அமைப்பாளராச்சே! இந்த ஹம்மிங்கை வச்சு அடுத்த படத்தில் சூப்பர் ஹிட் மெட்டு அமைக்கப் போகிறாராம்!"





"தலைவர் இனிமேல் இங்கே பேச வருவாரா என்பது சந்தேகம்தான்...!"
"ஏன் அப்படி நினைக்கிறீங்க?"
"அவர் பேசும்போது கைதட்டாமல், அவர் சோடா குடிக்கிறபோதெல்லாம் கைதட்டினார்களே!"
- பெ. கலாசாமி

வீட்டிலும் குடும்ப முழுமைக்குமாக ஒரொரு நாள் விருந்து நடந்து, திருமண அமளி ஓய்ந்து, கிருஷ்ணசந்திரனின் கீழ்ப்பாக்கத்து வீட்டில் உதயரேகாவின் உடைமைகளும் குடியேறின.

மகளை முறைப்படி கணவன் வீட்டில் விட்டுவிட்டு, உலகநாதன் குடும்பத்தினர் விடை பெற்றுச் சென்றபின், "கண்ணப்பா...." என்று மகனை மெதுவாக காந்திமதி அழைத்தார்.

முகம் இறுக, "கிருஷ்ணசந்திரன் என்று நீளமாகப் பெயர் வைத்துவிட்டு, இதென்ன கண்ணப்பா, மூக்கப்பா என்று? ஏதாவது ஒரு பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதுதானே?" என்று வெடுவெடுத்தான் மைந்தன்.

காந்திமதியின் முகம் வாடவும், "அதென்ன ஆன்... சாரி, சாரி. இனிமேல் அத்தை என்று அழைக்க வேண்டும் அல்லவா? ஒருத்தரை ஒரு விதமாய் அழைத்துப் பழகிவிட்டால், அதுவே ஒருபோதும் வாயில் வந்துவிடுகிறது. இல்லையா ஆ...ஊம், அத்தை? இதைச் சொல்லுங்கள் அத்தை. இவருக்கு என்ன இப்படி இரட்டைப் பெயர்? ஏதாவது ஒன்றோடு நிறுத்தியிருக்கலாமே?" என்று கேட்டாள் உதயரேகா.

"அதில்லேம்மா" என்று வாட்டம் மாறி, லேசாக முறுவலித்தார் காந்திமதி. "எனக்குச் சந்திரன் என்ற பெயரில் மோகம். உன் மாமாவுக்குக் 'கிருஷ்ணன்'. இவனே அரும்பாடுபட்டு ரொம்பவும் தாமதமாகப் பிறந்தானா, அடுத்து ஒன்று பிறப்பது அரிது என்று இரண்டு பெயரையும் சேர்த்து இவனுக்கே வைத்துவிட்டாராம்!"

மகன் எழுந்து வெளியே செல்லத் தொடங்கவும், சிரிப்பு நின்றுவிட, "கொஞ்சம் நில் சந்திரா. உனக்குத் திருமணம் ஆனதும், நம் ஊர்க் கோயிலுக்கு உங்கள் இருவரையுமாக அனுப்பிப் படையல் வைப்பதாக வேண்டியிருக்கிறேன். அதனால்...." என்று தொடங்கிய தாயை இடைமறித்து, "என்ன வேண்டுதல்! எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை கிடையாது" என்று முடித்தான் பிள்ளை.

"நம்பிக்கை இல்லையா? ராத்திரி பூஜைக்கெல்லாம் போனீர்களே!" என்று ஆச்சரியப்பட்டாள் அவன் மனைவி.

"பூஜைக்குப் போகிறேன் என்பதால் யார் யாரோ வேறு வேலையின்றி வேண்டிக் கொள்வதை எல்லாம் நான் செய்ய முடியுமா?" என்று மீண்டும் பெற்றவளின் முகம் வாட வைத்தான் கிருஷ்ணசந்திரன்.

ஏதோ பேச முயன்ற மருமகளைத் தடுத்து, "எனக்காக இல்லையப்பா. நான் வேண்டியது உன் நன்மைக்காக" என்றவள், கிருஷ்ணசந்திரன் தோளைக் குலுக்கவும், "இதோ, உன்னோடு வாழ்வைப் பிணைத்துக் கொண்டு இருக்கிறாளே, இவளுக்காகத் தயவு செய்து..." என்றார் தொடர்ந்து.

ஒரு வினாடி அவனிடம் ஒரு சலனம் தோன்றியது. ஒரு தாக்குதல் - நிராசை - வலி - எதுவாயிருந்தாலும், தோன்றிய விரைவிலேயே, தோன்றலே இல்லாதது போல மறைய, "சரிசரி - புலம்ப வேண்டாம். போய்த் தொலைக்கிறேன். அவளைக் கிளம்பச் சொல்லுங்கள்" என்று எரிந்து விழுந்துவிட்டு வெளியேறினான் கிருஷ்ணசந்திரன்.

கவலையுடன் நோக்கிய மாமியாரிடம் கண்சிமிட்டிச் சிரித்தாள் மருமகள். "என்ன அத்தை, இரண்டு செட் உடை போதுமல்லவா? கோயிலுக்குச் சாதாரணமானதாக ஒரு சின்ன பார்டர் பட்டுச் சேலையும், இன்னொன்று 'கோட்டா'வுமாக எடுத்து வைக்கட்டுமா?" என்று .எழுந்தாள்.

**கா**ரில் செல்லும்போது, "கடந்த நாலு தினங்களாக நீ, அம்மாவை முழுக்க முழுக்க 'அத்தை' என்றுதான் அழைக்கிறாய் என்பது எனக்கு நன்றாகவே தெரியும்; எதற்காக 'ஆன்...' என்று தொடங்கி விளக்கம் கொடுத்தாய் என்பதும் நன்றாகவே புரிகிறது. ஆனால், நான் எதற்காக என்ன பேசுகிறேன், செய்கிறேன் என்பதையும் நான் அறிந்தே இருக்கிறேன். எனவே, என் விஷயத்தில் குறுக்கிடாமல் இருந்தால் உனக்கு மிகுந்த நன்றி உடையவனாக இருப்பேன்" என்றான் கிருஷ்ண சந்திரன், தோரணையாக.

"உங்கள் நன்றி எனக்குத் தேவைப்படும் போது கட்டாயம் அப்படியே செய்கிறேன் சார்" என்றாள் உதயா மிகுந்த பணிவுடன்.

அருகில் இருந்தவனின் உடலில் சிறு விறைப்பை உணர்ந்து, விழிகளை மட்டும் திருப்பிக் கணவனின் முகத்தை நோட்டமிட்டவளுக்கு வியப்பாகிப் போயிற்று.

அவன் எதிர்பார்த்தது போல் ஆத்திரப்படவில்லை அவன். மாறாகப் பீறிட்ட சிரிப்பை அடக்கவே கணவன் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான் என்பதை அறியவும், அவளுள் உற்சாகம் குமிழியிட்டது. இந்த மாதிரி இலகுவான பேச்சிலேயே இவனை வளைத்துவிடலாம் போலிருக்கிறதே!

ஆனால், பண்ணை வீடு சென்று சிறிது நேரத்திற்குள்ளாகவே கிருஷ்ணசந்திரனின் மனநிலை அடியோடு மாறிவிட்டது.

(தொடரும்)



# மக்கள் ஆட்சி



"என்னா வாத்யாரே, நம்மள மாதிரி கேடி ஒத்தன் ஆட்சி புடிக்கறா மாதிரியெல்லாம் படம் வந்துக்குதாமே, பாத்தியா?"

"ஆங்! ஆமாம் பக்கிரி! சூப்பருமா. மம்மூட்டிதான் ஹீரோ வேசம் கட்டிகிறாரு. கலக்கிட்டாரு. கெத்தா நடக்கறதும், இண்டலா மூக்கால டைலாக்கு பேசறதும்... சே! மனுசன் கிங்கு!"

"கதையெல்லாம் டக்கரா கீதுன்னாங்க!"

"மஜா டைலாகுங்கோ. யார யாரையோ வியாபகப்படுத்துது-பின்னிட்டாங்கல்ல, பின்னி!"

"ஆமா, ரோஜா இன்னாமோ தெருத்தெருவா ஆடுதாமே?"

"அதையேன் கேக்கற? அதுதான் இருக்கறதுலேயே நாஸ்தியான விஷயம். கவர்மெண்ட்ட புடிக்கணும்னா கவர்ச்சி வேணுமாம். அதுக்காக பப்ளிக்கா டான்ஸ் ஆடுது ரோஜா! இதைப் பார்த்து நிஜத்துலயும் தலை விங்க ஆடாம இருக்கணுமே! அப்பப்போ சுந்தர் ராஜன், எதிர்க்கட்சிக்காரனுங்க, மன்சூரலி கானுன்னு மஜாவான ஜமா."

"அப்ப சும்மாங்காச்சியும் பாலிடிக்ஸ்ஸ இண்டலடிக்கற படந்தானுங்காட்டியும்?"

"ஒரேயடியா அப்படியும் சொல்ல முடியாது. ரஞ்சிதா பொண்ணு வந்ததுக்கப்பால கதைல கொஞ்சம் சூடு ஏறுது. அதவிட ஒரு கட்சிக்காரன், தலைவருக்காக தீக்குளிச்சிகினான்ன பொறவு, படம் ரொம்ப ஸ்ட்ராங் காயிடுது. அப்பால, வர மம்முட்டிய சொல்லணுமே! யப்பா! நமக்கு அப்பேர்கொத்த ஒரு தலைவரு கெடச்சா எப்படியிருக்கும்னு நெனச்சி, ஒரே குஜாலாயிடுச்சி!"

"அப்போ செல்வமணி திரும்பவும் டாப்புக்கு வராருன்னு சொல்லு!"

"கண்டிப்பா! ஒக்காந்து யோசிச்சி கதை எய்திஇறாரு. மீசிக்கும், காமிராவும் நல்லா ஒத்துப் போவுது. ரோசா பாடற ஒரு பாட்ட பன்னீரு எடுத்திருப்பாரு பாரு... டாப்பு!"

"அப்ப கண்டிசனா படம் பாத்துற வேண்டியதுதான்ற?"

"சொல்லோணுமாங்காட்டியும்!"

— துளசி

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345824; சர்க்குலேஷன் மானேஜர் : 2345823; விளம்பரம் - சந்தா : 2345822; மானேஜிங் டைரக்டர் : 2345821.
ஆண்டுச் சந்தா உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

## KEEP YOUR HEALTH IN CHECK

# COMPREHENSIVE HEALTH CHECK-UP



## FOR Rs.2,500/-

- Complete physical examination
- Computerised ECG
- Chest X-ray
- Rigid Proto-sigmoidoscopy
- Ultrasound examination of abdomen
- E.N.T. Examination
- Eye examination - Glaucoma screening
- Gynaec Examination (for women)
- PAP Smear (for Women)
- Master Laboratory Profile:
  Complete Blood Count (Hb, RBC, PCV, MCV, MCH, MCHC, Platelet Count, WBC), Total Protein, Albumin, BUN, Alkaline Phosphatase, SGOT, SGPT, Bilirubin, Cholesterol, TGL, HDL, Creatinine and Blood sugar (fasting)
- Stool for occult blood
- Urine Analysis
- Blood Grouping
- Nutrition counselling.

**One day. By 4 Consultants**

Mammogram and PSA (Special tests at additional cost)



# TAMILNAD HOSPITALS

Cheran Nagar, Madras - 601 302.

**Ph : 2375221 to 2375225 Fax : 044-2375229**

Insight 1196

**Detect Cancer early. That is the only way to fight the killer disease**

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka